

# லஞ்சம் கொடுத்தால் தான் லைசென்ஸ் கிடைக்குமா?

'ஆர்.டி.ஓ. ஆபீஸ்' என்று சொல்லி வாயை மூடுவதற்குள்ளாகவே "ஐயோ! ஊழல்! பயங்கரம்!" என்று அலறுகிறார்கள் அங்கு சென்று வந்த 'இனிய' அனுபவத்தில் திளைப்பவர்கள்.

மொப்பெட், மோட்டார் சைக்கிள் மற்றும் ஸ்கூட்டர் உரிமையாளர்கள் தத்தமது அனுபவங்களின் அடிப்படையில் சொன்ன வெவ்வேறு விதமான புகார்களைக் கேட்டுக் கேட்டுப் புளித்துப் போன காதுகளுடன் ஆர்.டி.ஓ. (தெற்கு) அலுவலகம் சென்றோம். அதன் வாசலில் ஒழுங்கில்லாமல் ஒரு சிறு கும்பல். சற்றே கவலையுடன் நின்றிருந்த ஒருவரை அணுகி விசாரித்தோம்.

"ஆறு மாதங்களுக்கு முன்னால் என் டூ—வீலர் லைசென்ஸுக்கு ரூ 200 கொடுத்தேங்க. இப்ப டாக்ஸி பெர்மிட்டுக்காகக் காத்திருக்கேன். இதுக்குஎவ்வளவு கேட்பாங்களோ, தெரியலை" என்றார்.

"அவர்கள் கேட்டால் நீங்கள் ஏன் கொடுக்க வேண்டும்? முறைப்படி பணம் செலுத்தி, காத்திருந்து வாங்கிப் போக வேண்டியதுதானே?" என்று கேட்டபோது சிரித்தார். "அப்ப எனக்கு வேலையே ஆகாது. காத்துக்கிட்டே இருக்க வேண்டியதுதான்" என்றார்.

அவரைக் கடந்து அலுவலகத்துக்குள் நுழைந்தபோது, "நீங்க எவ்வளவு ரிப்போர்ட் எழுதினாலும் இந்த ஆபீசைத் திருத்த முடியாதுங்க" என்று 'வாழ்த்தி' அனுப்பினார்.

அலுவலகத்தில் தலைமைப் பொறுப்பில் இருந்த ஆர்.டி.ஓ. தமக்குப் பேட்டி அளிக்கும் உரிமை இல்லை என்றும் டெபுடி கமிஷனர் ஆர்.ஜே. ராமச்சந்திரனைச் சந்திக்குமாறும் கூறினார். ஆர். ஜே. ஆர். என்று அந்த வட்டாரங்களில் அழைக்கப்படும் டெபுடி கமிஷனர் தமது தியாகராயநகர் அலுவலகத்தில் அளித்த மினி பேட்டி:

கே: ஆர்.டி.ஓ. அலுவலகத்தில் ஊழல் மிக அதிகமாகிவிட்டது என்கிறார்களே?

ப: ஏதேனும் குறிப்பிட்ட சம்பவம் இருந்தால் சொல்லுங்கள். நாங்கள் உடனே நடவடிக்கை எடுக்கிறோம்.

கே: ஆர்.டி.ஓ. (தெற்கு) அலுவலக வாசலிலேயே ஒருவர் எங்களிடம் தமது அனுபவங்களைச் சொன்னார். இருபது ரூபாய் கொடுக்க வேண்டிய இடத்தில் இருநூறு ரூபாய் கொடுத்து லைசென்ஸ் பெற்றதாக. அவருக்கு அங்கே மேற்கொண்டு வேலை ஆக வேண்டியிருந்ததால் பலமுறை கேட்டும் தமது பெயரை வெளியிட மறுத்துவிட்டார்.

ப: பெயரைச் சொல்லாவிட்டால் எப்படி நடவடிக்கை எடுக்க முடியும்?

கே: குறிப்பிட்ட குற்றச்சாட்டு இல்லாவிட்டால் என்ன? பொதுவான ஊழல் குற்றச்சாட்டை நீங்கள் மறுக்க முடியாது. பல டிரைவிங் ஸ்கூல்களில் பயிற்சிக்கு வருபவர்களும், பல ஏஜென்ஸிகளில் வாகனம் வாங்குபவர்களும் பரீட்சைக்குப் போகாமலேயே அந்நிறுவனங்களின் ஏற்பாட்டில் லைசென்ஸ் பெறுகிறார்களே, இது எப்படி சாத்தியம்?

ப: 'நீங்கள் பெயர்களைக் குறிப்பிட்டுச் சொல்லாவிட்டால் நான் எந்த நடவடிக்கையும் எடுக்க முடியாது. லஞ்ச ஊழல் குற்றச்சாட்டை நான் முற்றிலும் மறுக்கவில்லை. ஆனால் அது அளவுக்கு மீறி மிகைப்படுத்தப்பட்டுள்ளது என்கிறேன். பல்வேறு இலாகாக்களுடன் ஒப்பு நோக்கினால் எங்கள் இலாகாவில் ஊழல் மிகக் குறைவு. ஊழல் பட்டியலில் எங்கள் இலாகாவின் பெயர் மிகவும் பின்தங்கிய இடத்தில்தான் இருக்கிறது.

கே: இது ஓர் ஆறுதலா? மற்ற இலாகாக்களில் இலஞ்ச ஊழல் இருப்பதை நாங்கள் மறுக்கவேயில்லை. சமயம் வரும்போதெல்

"ஆர்.டி.ஓ. ஆபீஸ் வாசலில் இருந்த ஒருவரிடம் ரூ 125 கொடுத்தேன். லைசென்ஸ் என் வீடு தேடியே வந்துவிட்டது"



• ரியா



• பாலாஜி

"லெர்னர்ஸ் லைசென்ஸுக்கு ஃபாரம் வாங்குவதிலிருந்து எல்லாமே தகராறுதான். ஆர்.டி.ஓ. ஆபீஸில் ஃபாரம் தீர்ந்துவிட்டது என்கிறார்கள். அதே ஃபாரமை வெளியே மூன்று ரூபாய்க்கு இடைத்தரகர்கள் விற்றுக் கொண்டிருந்தார்கள்."

லாம் அதைத் தட்டிக் கேட்டுக் கொண்டுதான் இருக்கிறோம். இப்போது உங்கள் இலாகாவைப் பற்றித்தான் கேட்கிறோம். அதில் ஏன் இவ்வளவு தூரம் ஊழல் மலிந்திருக்கிறது? அதைக் குறைக்கவோ ஒழிக்கவோ என்ன செய்யப் போகிறீர்கள்?

ப: இந்த நிலைமைக்கு மூல காரணம் 'நேரம்'தான். பொன்னான நேரம் விரயமாவதை யாரும் விரும்புவதில்லை. அதனால் சீக்கிரம் காரியம் ஆவதற்காக லஞ்சம் தரத் தயாராகிவிடுகிறார்கள்.

கே: பொதுமக்களின் நேரம் வீணாகாமல் துரிதமாக நீங்கள் செயல்பட வேண்டியது தானே?

ப: அதற்கு எங்கள் இலாகாவில் போதிய ஆள் பலம் இல்லை. கடந்த பல ஆண்டுகளாக ஆர்.டி.ஓ. அலுவலகங்களில் பணிபுரிவோரின் எண்ணிக்கை உயராமலேயே இருந்து வருகிறது. ஆனால் சாலைகளில் வாகனங்கள் பன்மடங்கு பெருகிவிட்டன.

கே: ஆள் பலத்தை அதிகரிப்பதற்கு என்ன தடை?

ப: நிதி ஒதுக்கீடு, அரசாங்கக் கொள்கை— இவை அனுமதித்தாலொழிய எப்படி அதிகரிக்க முடியும்?

கே: ஆர்.டி.ஓ. அலுவலக வாசலில் ஒளிவு மறைவின்றித் தொழில் நடத்தும் இடைத்தரகர்களையாவது அப்புறப்படுத்தக்கூடாதா?

ப: அரசாங்க அலுவலகத்தில் பணிபுரிவோருக்கு அந்தச் சுறுசுறுப்பு இருக்கும் என்று நீங்கள் எதிர்பார்க்கிறீர்களா? அப்படியே சுறுசுறுப்போடு யாராவது முயற்சி எடுத்துக் கொண்டாலும் பொதுமக்கள் ஆதரவில் வளர்ந்து வரும் இந்தக் கூட்டத்தை நாங்கள் என்ன செய்துவிட முடியும்? மக்கள் இவர்களை ஆதரிப்பதை நிறுத்தினால், இவர்கள் இருக்கும் இடம் தெரியாமல் போய் விடுவார்கள்.

கே: நீங்களே சொன்னீர்கள் — பொன்னான நேரம் வீணாவதை விரும்பாமல்தான் மக்கள் குறுக்கு வழியை நாடுகிறார்கள் என்று.

ப: யாரேனும் ஒருத்தராவது பொறுமையாகக் காத்திருந்துதான் பார்க்கட்டுமே. நேர்மையாக முயற்சி செய்பவர் யாருக்குமே காரியம் நடப்பதில்லை என்று நீங்கள் சொல்லிவிட முடியாது.

கே: புதிய வண்டியைப் பதிவு செய்வதற்கு முன் அஞ்சலக சிறு சேமிப்பில் கணக்கு ஆரம்பிக்க வேண்டும் என்று கட்டாயப்படுத்துவது என்ன நியாயம்?

ப: அது அரசாங்கக் கொள்கை. கலெக்டர்களுக்கு இலக்குகள் நிர்ணயிக்கப்படுகின்றன. அவர்கள் தமக்குக்கீழ் உள்ள அலுவலகங்களுக்கு அதைப் பங்கிட்டுத் தருகிறார்கள்.

கே: குறிப்பிட்ட பதிவு எண்கள் வேண்டும் என்று விரும்பினால் அதிகப்படி பணம் செலுத்த வேண்டியுள்ளதே?

ப: ஆமாம். வரிசைக் கிரமப்படி பதிவு எண்கள் வழங்கி வருவார்கள். வரிசையை மீறி ஒரு எண்ணைக் குறிப்பிட்டுக் கேட்டால் ஐந்நூறு ரூபாய் செலுத்த வேண்டும்.

கே: இரண்டு சக்கர வாகனங்களுக்கு ஓட்டுனர் லைசென்ஸ் பெற எவ்வளவு தொகை செலுத்த வேண்டும்?

ப: பயிற்சியாளர் (லெர்னர்) லைசென்ஸுக்கு ஐந்து ரூபாய். அதை நிரந்தர லைசென்ஸாக மாற்றிக் கொள்ள இருபது ரூபாய். இதற்கு மேல் யார் எவ்வளவு கேட்டாலும் தயவு செய்து கொடுக்க வேண்டாம்!

— சீதா ரவி

புகைப்படங்கள்: யோகா
கே. வி. ஆனந்த்

**அடுத்த இதழில்:**

பர்னாலா; ரெபைரோ:



# பதவியில் நிலைப்பார்களா? பயங்கரவாதிகளை வெல்வார்களா?



**COVER STORY**

# LUNA



## நீடித்த ஓட்டத்தில் இதர மொபட்டுகள் ஏன் லூனாவிற்கு இணையாக முடியவில்லை.

- லூனாவில் மட்டுமே உள்ளது பெட்டி வடிவ சேஸிஸ் : எந்த மொபட்டிலும் கட்டுறுதிமிக்கது.
- லூனாவில் மட்டுமே உள்ளது முற்றிலும் பாதுகாக்கப்பட்ட என்ஜின் மற்றும் நான்கு ஃபில்ட்டர்கள் : ஆண்டாண்டுகளுக்கும் தொல்லையற்ற ஸர்விஸ்.
- லூனாவில் மட்டுமே உள்ளன— நவீன பெல்ட் டிரைவ் மற்றும் மறைவடக்கமான டிரான்ஸ்மிஷன் : மென்மையான ஓசையற்ற ஓட்டத்திற்காக; ஆண்டாண்டுகளுக்கும்.
- லூனா மட்டுமே உங்களுக்கு வழங்குகிறது எண்ணற்ற மைல்கள் ஓட்டத்துடன் கூடிய 12 மாத வாரண்டி.
- மொபட்டுகளில் லூனா ஒன்றுதான் இந்தியாவில் நம்பர் 1 பெயருடன் கூடிய நம்பிக்கையோடு வருகிறது; அதுவே கைனெடிக்.

லூனாவை வாங்குவதற்கு சிறந்த இதர காரணங்கள் :
தேர்ந்தெடுக்க வகை வகையான மாடல்கள், ஸிங்கிள் அல்லது டபுள் ஸீட்டுகள் • வகை வகையான எண்ணற்ற வண்ணங்கள் • இந்தியாவெங்கிலும் 500க்கும் மேற்பட்ட ஸ்தாபனங்களில் கிடைக்கின்றன • விற்பனைக்குப் பிந்திய விரைவான திறமையான ஸர்விஸ் • பாரமரிப்பில் குறைந்தசெலவாகும் மொபட

**மொபட் என்றால் அது லூனா**

கைனெடிக்
எஞ்ஜினியரிங் லிமிடெட்

OBM/8878/TM




# இங்கே காதலிகள் உருவாகின்றனர்!

பிரும்மாண்ட நூறு ஏக்கர் நிலப்பரப்பில் இந்தப் பக்கம் மொப்பெட் டிவிஷன்; அந்தப் பக்கம் மோட்டார் சைக்கிள்! மோட்டார் சைக்கிள் உற்பத்தியில் உலகின் டாப் நிறுவனங்களில் ஒன்றாகிய ஸுஜுகியும், நமது டி.வி.எஸ்.ஸும் இணைந்ததில் உருவான இண்ட்–ஸுஜுகி இப்போது பெயர் மாற்றம் பெற்று டி.வி.எஸ்.–ஸுஜுகி ஆகியிருக்கிறது.

சுமார் 300 டன் எடையுள்ள ராட்சத மிஷினில் ஜப்பானிய எஃகுத் தகட்டை வைத்து பட்டனை அழுத்த, அந்த மிஷினின் இரு பகுதிகள் நெருங்கி வந்து முத்தம் கொடுத்துக் கொண்டு பிரிய, பெட்ரோல் டாங்கின் ஒரு பகுதியாய் அமைய ஏற்றபடி எஃகுத் தகடு வெட்டப்பட்டு, வளைந்து உரு மாறுகிறது. அடுத்த மிஷினில் அதை மறுபடி வைத்து பட்டனை அழுத்த, மூன்று தனித் தனிப் பகுதிகளாக வெட்டப்பட்டு அனாவசியப் பிசிறுகளை நீக்கித் தந்துவிடுகிறது.

"இத்தனை பெரிய இயந்திரங்களை இயக்கும்போது தொழிலாளியின் போதாத காலம், ஏதாவது நேர்ந்துவிட்டால்?"

"விபத்து நடக்கவே வாய்ப்பில்லை! இதோ பாருங்கள்! சின்னச் சின்ன பல்ப் மாதிரி இருக்கில்ல....? இதில போட்டோ எலெக்ட்ரிக் கதிர் வீச்சு இருந்துக்கிட்டே இருக்கு.... தப்பித் தவறிக் கை அல்லது விரல் அபாய எல்லைக்குள் போனால் அடுத்த கணம் இயந்திரம் தானே நின்றுவிடும்!"

மூன்று பகுதிகளாக வெட்டப்பட்ட பெட்ரோல் டாங்க் அடுத்த பகுதியில் ஒன்றாகப் பற்ற வைக்கப்பட்டு, பிசிறுகள் நீக்கப்பட்டு, பெட்ரோல் வாய் வெட்டப்பட்டு, அதிலே சுற்று வளையம் பொருத்தப்பட்டு, முழு டேங்க்காக வெளியே வருகிறது. ஒவ்வொரு வேலையையும் ஒரே சீராக ஒவ்வொருவர் செய்வது கண்களை விரிய வைக்கும் விஷயம்.

மேலே நகர்ந்தால் விதவித நீளங்களில், பருமன்களில், வளைவுகளில் குழல்களும் கம்பிகளும் வெட்டப்பட்டு, பற்ற வைக்கப்பட்டு, மோட்டார் சைக்கிளின் அடிப்படை ஃப்ரேம்கள் உருவாகின்றன.

பிறகு கன்வேயர் பெல்ட்டில் ஒய்யாரமாய் நகர்ந்து வரும் அடிப்படை ஃபிரேம், ஒவ்வொன்றாக, ஒன்றன்பின்ஒன்றாக பெட்ரோல் டாங்க், ஹாண்டில் பார், சக்கரங்கள் என்று



• தொழிற்சாலையின் ஒரு தோற்றம்

• இஞ்சின் அசெம்ப்ளிக்குத் தனிப் பகுதி

பொருத்திக் கொண்டு, அந்த வரிசையின் இறுதியில் முக்கால் மோட்டார் சைக்கிள் வடிவம் பெற்றுவிடுகிறது. இஞ்சின் அசெம்பிளிக்குத் தனி இடம்.

கன்வேயர் பெல்ட் அரை அங்குலம் அரை அங்குலமாக நகரும்போதே மணப் பெண்ணுக்கு ஒவ்வொரு ஆபரணமாய்ப் பூட்டி அலங்கரிப்பதுபோல, ஒவ்வொரு தொழிலாளியும் ஒவ்வொரு புது பாகத்தைப் பொருத்தி, அழுத்தம் மிக்க பவர் கன் ஒன்றினுல் போல்ட்—நட்டை இறுக்குகிருர். அடுத்தவருக்கு அனுப்பிவிட்டு அடுத்த வண்டியை வரவேற்கத் தயாராகிருர். ஓர் இயந்திரத் தன்மையுடன் இயங்குகிருர்.

தூசி துரும்பு எட்டிப் பார்க்க முடியாதபடி பாதுகாப்புப் பெற்ற அறையில், ஸ்பிரே பெயிண்டிங் முறையில், ஒரே சீரான பெயிண்ட் அபிஷேகம் நடக்கிறது. ஆட்கள் நுழைய முடியாது. இந்த அறைக்குள். கம்பிகளில் பொருத்தப்பட்ட கொக்கிகளில் பெயிண்ட் செய்யப்பட வேண்டிய பாகங்களைத் தொங்கவிட்டுவிட்டால், அவை தன்னுல் நகர்ந்து போய், பெயிண்ட் ஷவரில் குளித்துவிட்டு, மினுமினுப்புடன் உலர்ந்து மறுபக்கம் வந்து சேர்கின்றன.

ஒவ்வொரு பாகமாக ஏற்றுக்கொண்டு நகர்கின்ற மோட்டார் சைக்கிள், கடைசி கட்டத்தில் லிட், ஹெட்லைட், டெயில் லாம்ப், இண்டிகேட்டர் விளக்குகளைப் பொருத்திக் கொள்கிறது. இறுதியாகப் புடைவைக் காப்பானையும் மாட்டிக் கொண்டு முழுசாய், கம்பீரமாய், எழிலாய் நிற்கிற வாகனத்தை ஒருவர் தள்ளிக் கொண்டு போய் அடுத்த பகுதியில் நிறுத்த, அங்கு டெஸ்ட்டிங்.

ஒரு வண்டி ஒரு லிட்டருக்கு எத்தனை கிலோ மீட்டர் தருகிறது என்பது இங்குதான் நிர்ணயிக்கப்படுகிறது. பின் சக்கரத்தை மட்டும் 50 கி.மீ. வேகத்தில் சுழல விடுகிருர்கள். குறிப்பிட்ட நேரத்தில் குடிக்கின்ற பெட்ரோலைக் கணக்கிடுகிருர்கள். கியரை மாற்றுவதோ, வேகத்தைக் குறைத்துக் கூட்டுவதோ இல்லை. (இதுதான் விளம்பரங்களில் பேசப்படும் ஐடியல் ரோட் கண்டிஷன்!)

மிகக் குறைவாக மைலேஜ் தரும் வண்டிகளைக் குறையை நிவர்த்திக்கத் திருப்பி அனுப்பிவிடுகிருர்கள்.

இதற்கு அப்புறம்வருவது டெஸ்ட்ரைடிங். சுமார் ஒரு டஜன் டெஸ்ட் டிரைவர்கள் இருக்கிருர்கள். ஆறு கிலோ மீட்டர் டெஸ்ட் ரூட் ஒன்றும் உருவாக்கியிருக்கிருர்கள். அதில் ஒரு ரவுண்டு அடித்துவிட்டு வந்து டெஸ்ட் டிரைவர்கள் சான்றிதழ் தருகிருர்கள். "டெஸ்ட்டட்" என்ற அட்டையை மாட்டிக் கொண்டு கிடங்கிற்குப் போகிறது வண்டி. அங்கிருந்து லாரிகளில் பல்வேறு டீலர்களுக்கு மோட்டார் சைக்கிள்களும் மொப்பெட்களும் பயணப்பட, நாகர் கோயில் நவீன் முதல் காஷ்மீர் காஸிம்கான் வரை பலரும் வாங்கிப் பயன்படுத்துவதுடன், காதலி அல்லது மனைவிக்கு அடுத்த படியாகத் தங்கள் வாகனத்தை நேசிக்கத் தொடங்குகிருர்கள்!

## ஸ்பேர் பார்ட்ஸ்:

* டி.வி.எஸ். என்ருலே போதும், தொழிலகத்தில் தரப்படும் உணவு விஷயம் ஜகப் பிரசித்தி. ஒரூர் தொழிலகத்திலும் மூன்று வேளை டீ, ஒருவேளை உணவு, ஒருவேளை டிபன். தவிர வீட்டுக்குப் போகும்போது ஒரு பையில் நொறுக்குத் தீனி போட்டுக் கொடுத்து அனுப்புகிருர்கள்!

* ஜப்பானியக் கூட்டுறவு, தொழில் துறையில் மட்டு மல்ல; தொழிலாளர் துறையிலும் உண்டு! வேலை தொடங்குமுன் எல்லாரும் பதினைந்து நிமிஷம் ஒரே இடத்தில் கூடித் தேகப்பயிற்சி செய்கிருர்கள்!

* உதிரி பாகங்களில் பெரும்பாலானவை, டி.வி.எஸ். குருப் நிறுவனங்களாலேயே தயாரிக்கப்படுகின்றன. ஆயினும் செய்ன், ஸ்பீடோ மீட்டர், மற்றும் சில எலெக்ட்ரிகல்பாகங்களை வெறு உற்பத்தியாளர்களிடம் வாங்கிக் கொள்கிருர்கள்.

* தொழிலாளி, உயர் அதிகாரி என்ற வேற்றுமையின்றி அனைவரும் ஒரே மாதிரி சீருடை அணிகிருர்கள். சாப்பாட்டுக் கூடத்தில் ஏற்றத் தாழ்வின்றி அனைவரும் கியூவில் நின்று உணவைப் பெற்றுக் கொள்கிருர்கள்.

— ஜூலி

# உங்கள் வாகனத்தைக் கவனமாகத் தேர்ந்தெடுங்கள்!

அத்துடன் தேர்ந்தெடுத்த
வாகனங்களைத் தவணைமுறையில்
வாங்கிடச் சரியான நிதி உதவி
நிறுவனத்தை நாடுவதும் அவசியம்.













**லக்ஷ்மி டிரேட் கிரெடிட்ஸ்—கார், மோட்டார்சைக்கிள், ஸ்கூட்டர், மொபெட் ஆகியவற்றைச் சுலபத் தவணைகளில் வாங்கத் தேவையான நிதி உதவி அளிக்கிறது— சென்னை நகரவாசிகளுக்கு மட்டும்.**




**லக்ஷ்மி டிரேட் கிரெடிட்ஸ் லிமிடெட்**

கீவ்ராஜ் எஸ்டேட்,
624, அண்ணா சாலை,
சென்னை 600 002.
போன்: 470311/476646

முப்பது ஆண்டுகளுக்கு மேல் நிதியுதவித் துறையில் அனுபவம் பெற்ற திறமைசாலிகளால் நிர்வாகம் செய்யப்படுவது லக்ஷ்மி டிரேட் கிரெடிட்ஸ். 9 ஆண்டுகளாக ஸ்கூட்டர், மோட்டார் சைக்கிள், கார், வேன்/லாரி, பஸ், ஆகிய எல்லா வாகனங்களுக்கும் நிதியுதவி வழங்கி வருகிறது— லக்ஷ்மி டிரேட் கிரெடிட்ஸ்.

ADWAVE/LTC 3281



# விபத்துக்களுக்கு வரவேற்பு விழா!

இருசக்கரவிசைவாகனங்கள் 1981-ல்86000 இருந்தன. இப்போது இரண்டு லட்சம் உள்ளன. வாகனங்கள் அதிகரிப்பதற்கேற்ப சாலை வசதிகள் மேம்பட்டால்தான் விபத்துக்கள் நேராமல் தவிர்க்க முடியும். ஆனால் இருக்கிற சாலைகளைப் பராமரிக்கவே நிதி வசதி இல்லாதபோது சாலைகளை அகலப்படுத்துவது அல்லது மாடிச் சாலைகள் அமைப்பது என்பதெல்லாம் எங்கே நடக்கப் போகிறது? எனவே ஓட்டுகிறவர்கள் ஜாக்கிரதையாக இருந்து விதிமுறைகளைக் கடைப்பிடித்தால்தான் உண்டு. அவற்றில் முக்கியமானவை:

* ஹெல்மெட் இல்லாமல் ஓட்டாதீர்கள்.
* பாதை மாறி ஓட்டாதீர்கள்.
* எப்போதும் இடது பக்கமே செல்லவும்.
* வளைந்து வளைந்து ஓவர் டேக் செய்யாதீர்கள்.
* வேகமும் அலட்சியமும் வேண்டாம்.
* குடித்துவிட்டு ஓட்டாதீர்கள்.

இவை எல்லாருக்கும் தெரிந்தவைதான். கடைப்பிடிக்கிறார்களா? அதுதானே கிடையாது! 1986—ல் போலீஸாரால் தண்டிக்கப்பட்டவர்கள் பற்றிய புள்ளி விவரங்கள் இதோ:

| | | |
|---|---|---|
| வேகம், அலட்சியம் | — | 2052 |
| அதிவேகம் | — | 416 |
| குடித்துவிட்டு ஓட்டியவர் | — | 64 |
| ஹெல்மெட் இன்றி.... | — | 16,638 |

''நகரில் ஓரிடத்திலிருந்து இன்னொரு இடத்துக்கு நிதானமாகப் போவதற்குப் பதில் வேகமாகச் சென்றால் அதிகபட்சம் மூன்று அல்லது ஐந்து நிமிஷம் முன்னதாகப் போய்ச் சேரலாம். இந்த ஐந்து நிமிஷத்துக்காக உயிரைப் பணயம் வைக்க வேண்டுமா?'' என்று கேட்கிறார் சென்னை போக்குவரத்து துணை கமிஷனர் பெருமாள். போதாக்குறைக்கு ரோஷத்துடன் போட்டி போட்டுக் கொண்டு சாலைகளை ரேஸ்கோர்ஸாக மாற்றுகிறவர்கள் வேறு!

முன்பெல்லாம் ஓட்டுனர் லைசென்ஸ் வழங்கும் அதிகாரம் போலீஸாரிடம் இருந்தது. இன்று அதற்குத் தனி அதிகாரி நியமிக்கப்பட்டிருக்கிறார். இதைப் போலீஸார் குறைகூறவிட்டாலும் கடுமையான சோதனைக்குப் பிறகுதான் லைசென்ஸ் வழங்க வேண்டும் என்று வற்புறுத்துகிறார்கள். மேலும் இருசக்கர வாகனங்களுக்கும் ஓட்டுனர் பயிற்சி பள்ளி நடத்த வேண்டும்; அதில் பயில்வதைக் கட்டாயமாக்கிப் பின்னரே, லைசென்ஸ் வழங்க வேண்டும் என்கிறார்கள்.

சாலையில் இருக்கக் கூடிய மேடு பள்ளங்கள், ஸ்பீட் பிரேக்கர்கள் பற்றிய விழிப்புணர்ச்சி தேவை. இல்லாவிட்டால் இவை ஆளைத் தூக்கி எறிந்துவிடும். டிராஃபிக் சிக்னலில் மஞ்சள் விழுந்து பச்சை வருவதற்குள் உறுமிக் கொண்டு புறப்படுவதும், மஞ்சள் விழுந்தபின் 'சிவப்பு வருவதற்குமுன் போய்விடலாம்' என்று வேகமெடுப்பவர்களும் விபத்தை வெற்றிலை பாக்கு வைத்து அழைப்பவர்களாகிறார்கள்.

உதவி, கமிஷனர் கண்ணன் இன்னொரு முக்கிய விஷயத்தைக் கூறினார்: ''பலர் ஹெல்மெட் விதியைத் திருப்திப்படுத்த ஹெல்மெட் அணிகிறார்கள். ஆனால் ஸ்ட்ராப்பைத் தொங்கவிட்டுக் கொண்டு கிளிப் போடாமல் போகிறார்கள். இது முட்டாள்தனம். என்னுடைய இன்ஸ்பெக்டர் நண்பர் ஒருவரே இப்படிச் சென்றார். ஒரு விபத்தில் ஹெல்மெட் கழன்று தனியே போய் விழ, மண்டையில் அடிபட்டு இறந்தே போனார்.''

சென்னையில் இரண்டு மொபைல் கோர்ட்கள் (நடமாடும் நீதிமன்றங்கள்) உள்ளன. இவை தினமும் எங்கெங்கு நிற்கும் என்பதை முடிவு செய்வது போக்குவரத்துத் துணைக் கமிஷனரும் தலைமை மாஜிஸ்திரேட்டும்தான். இது கடைசி விநாடிவரை மிகவும் ரகசியமாகப் பாதுகாக்கப்படும்.

1986—ல் மட்டும் 128 பெண் ஓட்டுனர்கள் ஹெல்மெட் போடாததால் தண்டிக்கப்பட்டிருக்கிறார்கள். ஆனால் பின்னால் அமரும் பெண், ஹெல்மெட் அணிய வேண்டாம் என்ற சலுகை எதற்கு? ''அரசு ஆணை அப்படித்தான் இருக்கிறது'' என்பதற்குமேல் உருப்படியான காரணத்தையோ வாதத்தையோ போலீஸ் தரப்பில் தர முடியவில்லை.

— கௌசல்யா



# வாங்குபவருக்கு என்ன வேதனை? விற்பவருக்கு என்ன பிரச்னை?

**ராஜசேகர்:** சென்னையில் பிரபல மொப்பெட் மற்றும் மோட்டார் சைக்கிள் விற்பனையாளர்களாய் விளங்கும் ராம்கே ஏஜென்சியின் மானேஜிங் பார்ட்னர்.

**மனோகரன்:** ராம்கே ஏஜென்சியில் நிர்வாகப் பொறுப்பில் இருக்கும் எம்.பி.ஏ. பட்டதாரி

**கோபால்:** ராம்கே ஏஜென்சியின் தலைமை மெக்கானிக்.

**சந்திரா:** ஐ.ஓ.பி.யில் பணிபுரிபவர். ஐந்து ஆண்டுகளுக்கும் மேலாக மொப்பெட் உபயோகித்து வருபவர்.

**ஸ்ரீநிவாசன்:** ஹிந்து நாளிதழில் ப்ரூஃப் ரீடராகப் பணிபுரிபவர். நான்கு வருடங்களாக ஒரு மொப்பெட் உபயோகித்துவிட்டு இப்போது இரண்டாவதாக ஒரு புதிய மாடல் மொப்பெட்டை வாங்கியிருப்பவர்.

இவர்கள் கலந்துரையாடியபோது......

கோபால்: என்ன ஸ்ரீநிவாசன் ஸார்! எங்ககிட்ட புதுசா வாங்கின வண்டி எப்படி ஓடிக்கிட்டிருக்கு?

ஸ்ரீநிவாசன்: இப்போதைக்கு ஒண்ணும் பிரச்னை இல்லே.

கோபால்: மழைக்காலம் வந்தாத்தான் மொப்பெட்டுக்கு உண்மையான சோதனைக் காலம்.

ராஜசேகர்: ஸ்ரீநிவாசன், உங்க லேட்டஸ்ட் மாடல் வண்டியை மழைக்காலத்தைக் கூடத் தாங்குகிற மாதிரிதான் திருத்தி அமைக்க முயற்சி பண்ணியிருக்காங்க.

கோபால்: ஆமாம், எலெக்ட்ரிகல் டெர்மினல்களைப் பாதுகாப்பாகமூடியிருக்காங்க. இரண்டு அடி தண்ணியிலகூட நீங்க போகலாம்.

ஸ்ரீநிவாசன்: மழைக்காலம் வரட்டும். அப்ப ஓட்டிப் பார்த்தால் தெரிஞ்சு போகுது!

சந்திரா: நான் என் மொப்பெட்டில் கோவா வரைக்கும் போயிட்டு வந்திருக்கேன். என் பிரயாணத்தின்போதும் சரி, அதற்குப் பிறகும் சரி என் வண்டியில அதிகம் பிரச்னை வந்ததே இல்லே.

மனோகரன்: பொதுவா 1500 கி.மீ.க்கு ஒருமுறை வண்டியை ஸெர்வீஸிங்குக்குக் கொடுத்தால் எந்தவிதமான பிரச்னையும் வராது.

ஸ்ரீநிவாசன்: அப்படிச்சொல்லமுடியாது. என் முதல் வண்டியை ஆறு வருடங்களுக்கு உபயோகிச்சேன். அந்த ஆறு வருடங்களில் நான் அதன் பராமரிப்புக்காக நாலாயிரம் ரூபாய் செலவு செய்திருக்கிறேன்....

மனோகரன் (கணக்குப் போட்டு): அதாவது ஒரு மாதத்துக்குச் சுமார் ஐம்பத்தைந்துரூபாய். அது ஒருபெரியதொகைன்னு சொல்ல முடியாதே.

கோபால்: ஆமாம். அதனால் கிடைக்கிற சௌகரியத்தை நீங்கள் கணக்குப் பண்ணுங்களேன். உங்களுக்கு எவ்வளவு நேரமும் சிரமமும் மிச்சமாகிறது?

சந்திரா: வண்டி இருந்தால் சௌகரியம் தான். ஆனால் அதற்கு ஸ்பேர் பார்ட்ஸ் வாங்கறது இருக்கே.... அதை நினைச்சாத்தான் நடுங்கும். ஏகப்பட்ட விலை ஆகுது ஒவ்வொரு பார்ட்டும்.

ராஜசேகர்: ஸ்பேர் பார்ட்டுகளுக்கு மத்திய அரசு இருபது சதவிகிதம் எக்ஸைஸ் டியூடியும் மாநில அரசு பதினைந்து சதவிகிதம் சேல்ஸ் டாக்ஸும் விதிக்கிறது. இது குறைந்தால் விலை கணிசமாகக் குறையும்.

ஸ்ரீநிவாசன்: ஸ்பேர் பார்ட்ஸ்னு சொன்னதும் எனக்கு ஸ்பேர் டயர் நினைவுக்கு வருகிறது. ஸ்கூட்டருக்கு உள்ளது போல் மொபெட்டுக்கும் ஏன் ஒரு ஸ்டெப்னி தரக் கூடாது?

கோபால்: ஸ்கூட்டருக்கு உள்ளது போல் மொபெட்டின் இரண்டு சக்கரங்களும் ஒரே அமைப்பானவை அல்ல. எந்தச் சக்கரத்துக்கு என்று மாற்றுச் சக்கரம் தர முடியும்?

ஸ்ரீனிவாசன்: 'Die-cast' சக்கரங்களைப் பொருத்தினால் என்ன?

கோபால்: இதனால் வண்டியின் கனம் அதிகரிக்கும். அது மட்டும் இல்லை. நம் நாட்டுச் சாலைகளை இந்த die cast சக்கரங்களால் நீண்ட காலம் தாங்க முடியாது. குண்டு, குழிகளைக் கடக்கும்போது ஏற்படும் அதிர்வுகளைத் தாங்கிக் கொண்டு சக்கரக் கம்பிகள் சற்று வளைந்து கொடுக்கும். இந்த வசதி die cast சக்கரத்தில் கிடையாது.

சந்திரா (ராஜசேகரை நோக்கி): சக்கரத்தைக் கழற்றவும் திருப்பி மாட்டவும் நீங்கள் கற்றுத் தர வேண்டும்.

ராஜசேகர்: நாங்கள் கற்றுக் கொடுக்கத் தான் செய்கிறோம். எங்கள் வாடிக்கையாளர்களுக்குக் கற்றுத் தருவதோடு அக்கம் பக்கத்தில் உள்ள வல்கனைசிங் கடைக்காரர்களுக்குக்கூடக் கற்றுத் தருகிறோம்.

கோபால்; ஆனால் பல வாடிக்கையாளர்கள் அடிப்படை விஷயங்களைத் தெரிந்து கொள்வதில்கூட ஆர்வமோ அக்கறையோ காட்டுவதில்லை.

மனோகரன்: ஆமாம். 'வண்டியை உங்களிடம் வாங்கியிருக்கிறோம். ஏதேனும் பிரச்னையிருந்தால் உங்களிடமே திரும்பி வருவோம்' என்று சொல்லி எதையுமே கற்றுக் கொள்ள மறுத்துவிடுகிறார்கள். இதனால் இரு தரப்பிலும் பிரச்னைகள் வளரும். ஸ்பார்க் பிளக்கைச் சுத்தம் செய்வது போன்ற சில சிறிய விஷயங்களைத் தெரிந்து வைத்துக் கொண்டால் ரொம்ப சௌகரியம்.

கோபால்: உதாரணமாக, பின்பக்கச் சக்கரத்துக்கு 40 பி.எஸ்.ஐ. காற்று வைக்க வேண்டும் என்று படித்துப் படித்துச் சொல்லி அனுப்புவோம். பலர் 32—இல் வைத்து அப்படியே ஓட்டிக் கொண்டு இருப்பார்கள். இதனால் சக்கரங்கள் சீக்கிரம் பாழாவதோடு பெட்ரோலும் அதிகம் செலவாகும். வண்டி வாங்குவதில் காட்டும் ஆர்வத்தை அதைப் பராமரிப்பதிலும் காட்ட வேண்டாமா?

சந்திரா: சில வண்டிகள் ஒருமுறை ரிப்பேர் ஆனால் அதற்குப் பிறகு முழுக்கச் சரியாவதே இல்லை. அதில் ஏதேனும் சில்லறைப் பிரச்னைகள் மாறி மாறி வந்து கொண்டேயிருக்கின்றன. இது சில வண்டிகளின் 'ராசி' என்று நம்பத் தோன்றுகிறது. அதுமட்டும் அல்ல, வேண்டுமென்றே பிரச்னைகளை முழுக்கச் சரி செய்யாமல் வாடிக்கையாளர்களை மீண்டும் வரவழைக்கிறார்களோ என்றும் சந்தேகிக்கத் தோன்றுகிறது.

ராஜசேகர்: இரண்டுமே உண்மையல்ல. **Pre Delivery Inspection** என்று ஒவ்வொரு வண்டியையும் விற்பதற்கு முன்னால் அதனைக் கடுமையாகச் சோதித்து ஏதேனும் சில்லறைப் பிரச்னை இருந்தால் சரி செய்துவிடுகிறோம். வாடிக்கையாளரை மீண்டும் மீண்டும் வரவழைப்பதென்பது சாலை ஓர மெகானிக்குகளுக்கு வேண்டுமானால் லாபகரமாய் இருக்கலாம்; ஆனால் நீங்கள் நினைப்பது போல் எங்களுக்கு அதனால் எந்தவிதமான லாபமும் இல்லை. பார்க்கப் போனால் நஷ்டம்தான். பழுது பார்க்கும் வேலைகள் எங்கள் ஒர்க் ஷாப்பில் இருக்கும் இடத்தையும் எங்கள் வேலை நேரத்தை அதிகமாக எடுத்துக் கொள்ளும். புதிய வண்டிகளைக் கவனிக்கப் போதிய இடம், நேரம் இல்லாமல் போகும். அந்த நேரத்தில் பெயின்டிங், டிங்கரிங் போன்ற பெரிய வேலைகளைச் செய்தாலாவது எங்களுக்கு லாபம் கிடைக்கும்.

மனோகரன்: ஒவ்வொரு வருடமும் நாங்கள் இலவச 'செக்—அப்' முகாம் நடத்த வேண்டும் என்றும் விதி இருக்கிறது. இதற்கு நாங்கள் நிறைய செலவு செய்கிறோம். ஆனால் இதில் கிடைக்கும் ஓரளவு விளம்பரத்தைத் தவிர வேறு லாபம் எதுவும் கிடையாது.

கோபால்: போதாக்குறைக்கு, இந்த முகாம்களுக்கு வருபவர்கள் பணமே செலுத்தாமல் பழைய வண்டியைப் புதிதாக்கிக் கொண்டு போய்விடலாம் என்ற எண்ணத்துடன் வருகிறார்கள்! உதிரி உறுப்புகளை இலவசமாகத் தருவதில்லை. அவற்றுக்குப் பணம் பெற்றுக் கொண்டு, மாற்றுதல், பொருத்துதல், சரி செய்தல் போன்ற வேலைகளை மட்டுமே இம்முகாம்களில் இலவசமாகச் செய்து தருகிறோம்.

ஸ்ரீநிவாசன்: ஒரு லிட்டர் பெட்ரோலுக்கு 60 கி.மீ. தூரம் ஓடும் என்று விளம்பரம் செய்தும் என் வண்டி ஆரம்பத்தில் நாற்பது கி.மீ.தான் ஓடியது. ஒரு 'செக்—அப்' செய்த பிறகு 50—55 ஓட ஆரம்பித்தது. அதற்குப்

பிறகு பிரச்னை எதுவும் இருக்கவில்லை.

கோபால்: முறைப்படி பராமரித்தால் அதிக கி.மீ. கொடுக்கும். 30-35 கி.மீ. வேகத்தைத் தாண்டக் கூடாது. பெட்ரோலுடன் 2T எண்ணெய் கட்டாயம் போட வேண்டும். அதில் கலப்படம் இல்லாமல் இருக்க வேண்டும். ஒழுங்காக ஸெர்விஸிங்குக்குக் கொடுக்க வேண்டும்.

ஸ்ரீநிவாசன்: வாடிக்கையாளரின் பிரச்னைகளுக்குப் பதில் சொன்னீர்கள். விற்பனையாளர் என்கிற முறையில் உங்களுக்கும் பிரச்னைகள் இருக்குமே?

ராஜசேகர்: மிகப் பெரிய பிரச்னை, நாங்கள் விற்பனையாளர்தான் என்பதை மறந்து நாங்களே தயாரிப்பாளர் என்ற நினைவோடு எங்களை எல்லோரும் அணுகுவதுதான்! மத்தளத்துக்கு இரண்டு பக்கமும் இடி! நாங்கள் தயாரிப்பாளர்களுக்கும் பதில் சொல்ல வேண்டும். வாடிக்கையாளர்களுக்கும் பதில் சொல்ல வேண்டும். எங்கள் தயாரிப்பாளர் பல சௌகரியங்களை, சலுகைகளை எங்களுக்கு அளித்தாலும் 'கியாரண்டி' காலத்துக்குள் பழுதாகி மாற்றப்படும் உறுப்புக்களின் மொத்தச் செலவையும் நாங்களே ஏற்க வேண்டுமென்கிறார்கள். இது நியாயமாகப் படவில்லை.

தொகுப்பு: **எஸ்ஸார்**
படம்: **கே.வி. ஆனந்த்**


கோபால்

# சாலை ஓர மெக்கானிக்குகள்

**இ**ரு சக்கர விசை வாகனங்கள் அதிகரித்தாலும் அதிகரித்தன, மூலைக்கு மூலை மெக்கானிக் ஷாப்களும் முளைத்துக் கொண்டிருக்கின்றன. ஒரு மெக்கானிக் எப்படி உருவாகிறார் என்பது சுவையான விஷயம். அரைகுறையாகப் படிப்பை விட்டவர்கள், வீட்டில் அடித்துத் துரத்தப்பட்டு அல்லது கோபித்துக் கொண்டு வெளியேறியவர்கள் மெக்கானிக் வேலைக்கு வருவது சகஜம். சிலர் உண்மையிலேயே மனம் ஈர்க்கப்பட்டும் வருவார்கள்.

எட்டு, பத்து வயதில் மெக்கானிக்கிடம் பயிற்சிக்குப் போய்ச் சேர்ந்தால் முதலில் இவர்களுக்குத் தரப்படும் வேலை, டீ வாங்கி வருவது, வண்டி துடைப்பது ஆகியவைதான். பிறகு ரிப்பேர் செய்ய உதவும் உபகரணங்கள் பற்றிய பாடம் நடக்கும். மெக்கானிக், "திருப்புளி" என்று கேட்டால் பையன் கூர்ப்பகுதியைத் தன் கரத்தில் வைத்துக் கொண்டு பிடி பகுதியை மெக்கானிக் பக்கம் நீட்ட வேண்டும். இது தலைகீழானால் அந்தத் திருப்புளியாலேயே அடிக்கப்பட்டுக் கை சிவக்கும்! எட்டாம் நம்பர் ஸ்பானருக்குப் பதில் ஆறும் நம்பர் ஸ்பானரை நீட்டினால் அடி! கட்டிங் பிளேயர் கேட்டு எடுத்து வரத் தாமதமானால் அடி! வாங்குகிற அடிக்காகவே சம்பளம் பெறலாம்! ஆனால் அதுதான் கிடைக்காது! ஏதோ ஒருவேளை நாஷ்தா, ஒருவேளை சாப்பாட்டுக்குக் கிடைத்தாலே பெரிய காரியம். உடம்பு சரியில்லாமல் படுத்தால்தான் ஓய்வு! லீவு, ஆயுத பூஜையன்று மட்டுமே. ஞாயிறு பிற்பகல் சற்று இளைப்பாற இயலும்.

பையன்களுக்குள்ளே ஸீனியர், ஜூனியர் பிரிவும் உண்டு. ஸீனியர், தான் மெக்கானிக்கிடம் வாங்கிய அடிகளை மறக்காமல் அவற்றை ஜூனியருக்கு ஒன்று விடாமல் அர்ப்பணிப்பான்! அனுபவம் பெற்ற ஸீனியருக்கு மெக்கானிக் ஷாப்களில் கிராக்கி! அங்கே ஓரளவு சம்பாதித்ததும் தானே ஒரு சின்னச் சாலையோரக் கடை ஆரம்பித்து வண்டிகளுக்கு வைத்தியம் பண்ணத் தொடங்குவான்.

**செ**ன்னை மவுண்ட்ரோடு தேனாம்பேட்டை பகுதியில் உள்ள மெக்கானிக் கோபாலுக்கு இன்று வயது 27. பத்தாவது வயதில் ஸ்பானர் பிடிக்க ஆரம்பித்தவர்! அவரிடம் ஒரு மினி பேட்டி:

"மெக்கானிக்குகள் அநியாயமாய்ப் பணம் பிடுங்குகிறார்கள் என்ற கருத்து நிலவுகிறதே?"

"நிரந்தர கஸ்டமர்களுக்கு ஒரு ரேட்; எப்போதாவது வரும் கஸ்டமருக்கு ஒரு ரேட் என்று வித்தியாசம் உண்டு. ஆனால் சில மெக்கானிக்குகள்தான் அபூர்வமாய் அநியாய ரேட் வாங்குவார்கள். இவர்களிடம் சிக்கிய வண்டி ஓனர்கள், வண்டியைப் பற்றி ஒன்றும் அறியாத அப்பாவிகளாய் இருந்தால் ஆபத்துதான்!"

"உங்களுக்கு ஏதாவது பிரச்னைகள் உண்டா?"

"ஏனில்லை? அவ்வப்போது போலீஸ்காரர்கள் வந்து, "கடைக்கெதிரே வண்டிகளை நிறுத்தி வைப்பது போக்குவரத்துக்கு இடைஞ்சல்" என்பார்கள். அவர்களைக் 'கவனிக்க' வேண்டும். என் கடையைப் பெரிதாக்க விரும்பி, பாங்கில் கடன் கேட்டால் தரமாட்டேனென்கிறார்கள். அரசியல்வாதிகள், 'சுய வேலை வாய்ப்புக்கு உதவுகிறோம்' என்று பேசுவதில் மட்டும் குறைவில்லை!"

மெக்கானிக் கோபால், வாகனச் சொந்தக்காரர்களுக்குத் தரும் அட்வைஸ்: "அடிக்கடி மெக்கானிக்கை மாற்றாதீர்கள்!"

பேட்டி: **எஸ். சந்திரமௌலி**

படம்: **யோகா**

# மாஸ்காட் எம்ஜி

## குட்டி அசுரன் குட்டி விலையான ரூ.7985/-*, அதை வாங்க உள்ள 12 நல்ல காரணங்களில் ஒன்று



Everest/S/86/BBIL/37 TAM

## மாஸ்காட் எம்ஜி
குட்டி அசுரன்

Brooke Bond India Ltd.
Automotive Division




டானிக் ரொம்ப மஜாவா இருக்கு வாரு!
ரொம்ப டாங்க்ஸ்!

லஞ்ச ஊழல் ஒழிப்பு மசோதா

லஞ்ச ஊழல்

டாக்டர் சிதம்பரம்

சிதம்பரம்

கணக்கு போடு!

இங்கிலீஷ் படி!

ஸயன்ஸ் தான் முதல்லே!

'அ' ஆ எழுது!

டிராயிங்!

இது ஒண்ணும் உருப்படாது!

இதர கூட்டணிக் கட்சிகள்

முஸ்லீம் லீக்

காங்கிரஸ்

கருணாகரன்




# கல்கி

1987 மார்ச் 1
மலர் 45 இதழ் 31
அக்ஷய மாசி 17




# பக்தவத்சலம்

தமிழக அமைச்சரவையில் மிக நீண்ட காலம் பதவியில் இருந்தவர் என்று பக்தவத்சலத்துக்கு ஒரு புகழ் உண்டு. இதைச் சிலர், அவர் பதவிக்கு ஆசைப்பட்டதாகத் தப்பர்த்தம் செய்து கொண்டு கிண்டலாகக் கூடக் கூறுவார்கள். ஆனால் உண்மை என்ன? பக்தவத்சலத்தின் அறிவும் ஆற்றலும், நிர்வாகத் திறனும், எல்லா இலாக்காக்களிலும் பதவியில் இருந்து அவர் அடைந்திருந்த அனுபவங்களும்தாம் அவரை அமைச்சரவையில் தொடர்ந்து இடம் பெறச் செய்தனவே தவிர, பதவி மோகம் அல்ல. பக்தவத்சலத்தை அமைச்சரவை இழப்பது என்பது தமிழகத்தின் இழப்பாகக் கருதப்பட்டது.

பக்தவத்சலத்தின் மறைவுடன் ஒரு சகாப்தம் முடிவுற்றதாகக் கூறுதல் பொருந்தும். அந்தக் காலகட்டத்தில் ஜனநாயகப் பண்புகளும் மரபுகளும் ஆட்சி முறை நெறிகளும் கருத்துடன் கடைப்பிடிக்கப்பட்டன. அதிகாரிகள் மதிக்கப்பட்டார்கள். அவர்கள் அமைச்சர்கள் கூறுவதை நிறைவேற்றி வைக்கும் சேவகர்களாகக் கருதப்பட்டதில்லை. அதிகாரிகள் ஆலோசனைகளை வழங்கினார்கள். பல சந்தர்ப்பங்களில் அவை ஏற்கப்பட்டன. ஒருசமயம் காடு வளர்ச்சிக்கு ஒதுக்கப்பட்டிருந்த நிலத்தில் இரண்டாயிரம் குடும்பங்கள் குடிசைகள் போட்டுக் கொண்டு குடியேறிவிட்டன. அவர்களை வெளியேற்றுமாறு பக்தவத்சலம் கலெக்டருக்கு உத்தரவிட்டார். கலெக்டரோ, 'அவர்களுக்கு வேறு இடம் ஒதுக்கிக் குடியேற வசதி செய்யாமல் விரட்டினால் விபரீதம் விளையும்' என்று எச்சரித்தார். அந்த யோசனை உடனே ஏற்கப்பட்டு முதல்வர் மறு உத்தரவு பிறப்பித்தார்.

அதிகாரிகளுக்குச் சுதந்திரங்கள் இருந்தன. தில்லிக்குச் செல்லும் அதிகாரிகளுக்கு அரசுக் கொள்கைகளை நன்கு விளக்குவார் பக்தவத்சலம். அந்தக் கொள்கைக்கு உட்பட்டு அதிகாரிகள் தில்லியில் பேசி, உடனுக்குடன் முடிவுகள் எடுக்கலாம். எல்லா இறுதி முடிவுகளுக்கும் பக்தவத்சலம் பொறுப்பு ஏற்பார். இன்னொருவர் மீது பழி சுமத்தி நழுவுவது என்ற பேச்சு கிடையாது.

தாமும் சுதந்திரமாக இயங்குவார். தமக்குச் சரி என்று தோன்றினால் அஞ்சாமல் காரியத்தில் இறங்குவார். 1965 இல் அவர் ஓர் இடைக்கால பட்ஜெட் சமர்ப்பித்ததைப் பலர் குறை கூறினார்கள். ஆனால் அவர் செய்தது சரி என்று பின்னால் நிரூபணமாயிற்று. அதேபோல் தேசிய அபிவிருத்தி கௌன்சிலில் அவர் நான்காவது திட்டத்தை ஐந்தாண்டுகளுக்கு வகுக்காமல் ஆண்டாண்டுக்கு வகுக்க வேண்டும் என்றார். காரணம், அப்போது நாடு முழுவதுமே ஒரு கடுமையான வறட்சி நிலையைச் சந்திக்க நேர்ந்ததுதான். பக்தவத்சலத்தின் யோசனை அந்தக் கூட்டத்தில் நிராகரிக்கப்பட்டது. ஆனால் காரியம் என்னவோ அவர் சொன்னபடிதான் நடந்தது! இந்தியா — பாகிஸ்தான் யுத்தத்தின்போது ராஜாஜி பேசிய, எழுதிய விஷயங்கள் தவறு என்று கருதினார் பக்தவத்சலம். அந்த ஆழ்ந்த நம்பிக்கையின் அடிப்படையில் தமது மதிப்புக்குரிய தலைவர், முன்னாள் கவர்னர் ஜெனரல் மீது நடவடிக்கை எடுக்கவும் உத்தேசித்தார்! மத்திய அரசு குறுக்கிட நேர்ந்தது!

அவரது ஞாபக சக்தி அசாதாரணமானது. பல காலம் முன்பு பழகியவரின் குரலை மட்டுமே கேட்டுவிட்டு, அவரை இன்னார் என்று அடையாளம் கண்டு கொண்டு, அவரை அழைத்து வருமாறு பக்தவத்சலம் தம்மை அனுப்பியதை அழகேசன் நினைவு கூர்வார். இந்த ஞாபக சக்தி ஆலோசனைக் கூட்டங்களில் அவர் மதிப்பை உயர்த்தியது. மாநில அபிவிருத்திக் கூட்டங்களுக்கு அதிகாரிகள் வரும் போது பக்தவத்சலம் போலவே அவர்களும் விஷயங்களை நன்கு ஆராய்ந்து அறிந்து கொண்டு வரவேண்டும். இல்லையெனில் நிச்சயம் தலைகுனிவு ஏற்படும். இதனால் அதிகாரிகள் எப்போதும் விழிப்புடனிருந்தார்கள்.

கோப்புகள் தேக்கம் என்றால் என்னவென்றே தெரியாத காலம் அது. அதிகாரிகள் எப்போது வேண்டுமானாலும் முதல்வரைச் சந்திக்கலாம். யாருடனாவது பேசிக் கொண்டிருந்தால் கூட நிலை வாசலில் அதிகாரியின் தலை தென்பட்டால் எழுந்து வந்து, அறையின் மூலையில் ஒதுங்கி நின்று, அவருடன் பேசி அனுப்புவார். அவசரக் காரியமானால்தான் இப்படிக் குறுக்கிடுவார் அதிகாரி என்பது முதல்வருக்குத் தெரியும்.

பக்தவத்சலத்தின் உடலுக்கு ராஜ மரியாதை காட்டித் தகனம் செய்வதும் அவருக்கு நினைவுச் சின்னம் அமைப்பதும் பெரிதல்ல; அவர் காலத்திய ஆட்சி முறையைத் திரும்பக் கொணர்வதே முக்கியம்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# ஈடு இணை இல்லாத இளமை வேகம்...



# விஜய் சூபர் மார்க் II

வேறு எந்த 150cc ஸ்கூட்டரும் தரமுடியாத

● சிக்கனம் ● சக்தி ● பாதுகாப்பு ● உழைப்பு

அனைத்தும் அளிக்கும் அற்புதமான ஸ்கூட்டர்.

**விஜய் சூபர் — ஸ்கூட்டர் உலகில் சூபர் ஸ்டார்!**



**ஸ்கூட்டர்ஸ் இந்தியா லிமிடெட்**
352, அண்ணா சாலை,
சென்னை 600 035.
போன் : 450654.

விற்பனையாளர்கள் :

● சென்னை : மெட்ராஸ் ஸ்கூட்டர்ஸ். போன் : 451774
● சரவணன் ஆட்டோ ஒர்க்ஸ். போன் : 470274
● மதுரை : பாபு ஆட்டோ எய்ட்ஸ். போன் : 33047
● திரைடாஸ். போன் :32393 ● சேலம்: விஜய் ஏஜென்சீஸ். போன் :7123
● கோவை: ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ். (SI) லிமிடெட். போன் 23363/64
S.J. பாலகிருஷ்ணன் & கோ. போன்: 31759. ● திருச்சி : விக்னேஸ்வரா & கோ. போன் : 28928 ● திருநெல்வேலி : இந்தியா ஸ்கூட்டர். போன் : 4700 ● பாண்டிச்சேரி : பைலட் ஏஜன்சீஸ். போன் : 6460.

ADWAVE SIL 3090A

"அதோ வரான்சசி...." சிவா முகத்தில் மலர்ச்சி.

"என்ன மச்சி இன்னிக்கு இப்படி லேட் பண்ணிட்டே?" என்றான் கோபி.

"இல்லேடா கோபி! நம்ம வேணு தெரியாது வேணு.... அவன் ஒரு டிரபிள்லே மாட்டிக்கிட்டாண்டா...."

"எந்த வேணுடா?"

"என்ன சிவா? எங்க தெருவுக்கு நாலாவது தெருவிலே ஒரு டெய்லர் கடை இருக்கில்லே, அதுக்கு எதிர் வீடு—'பிரின்ஸ்' காலேஜ்லே படிச்சானே அந்த வேணுடா!"

"ஓ! அவனு? சரிசரி! சொல்லு."

"வேணுவும் மூர்த்தியும் ரொம்பவே பிரெண்டுங்கடா. இவனும் அவனும் எப்பவுமே ஒண்ணாத்தான் சுத்துவானுங்க. மூர்த்தி வீட்டுக்கு அடிக்கடி போற பழக்கம் வேணுவுக்கு. மூர்த்தி தங்கச்சி ஒருத்தி பிளஸ் டு முடிச்சிட்டு நாலு வருஷமா வீட்டுலேயே இருக்கிறு. விமலான்னு பேரு. இந்த வேணுவுக்கும் விமலாவுக்கும் எப்படியோ ஒரு 'இது' வாயிட்டுது"

"ஓ! அதுதான் விஷயமா?"

"என்னடா கோபி அவ்வளவு இன்டலா நீ கேட்டுட்டே? வேணு சும்மா பொங்கிப் பொங்கி அழுதுட்டாண்டா. ஒரு மாதிரி 'டிவைன் லவ்'வுடா அவங்க ரெண்டு பேருக்கும். அந்த விமலா இல்லேன்னு நான் தூக்கு மாட்டிக்கிட்டுச் செத்துடுவேன்னு சொல்லிட்டு, ஒன்னு அழுதுட்டாண்டா வேணு. ஒரு மாதிரியா, அவனைச் சமாதானப்படுத்திட்டு வந்திருக்கிறேன்."

"இதோ பார் சசி.... இப்ப இதுலே வேணுவுக்கு என்னடா பிரச்னை?"

"மூர்த்திக்கு விஷயம் தெரிஞ்சி போயிட்டுதுடா. அவ்வளவுதான். அவன் தங்கச்சியைப் போட்டுப் பின்னி எடுத்திட்டிருக்கிறுன். வேணுகிட்டேயும் ஒரே சண்டை...."

"என்னன்னு சண்டை போட்டானும்?"

"ஒன்னை என் வீட்டுப்படி ஏற விட்டதே தப்பு'ன்னு கத்தியிருக்கிறுன் மூர்த்தி. என்னவோ சமாதானம் சொல்லியிருக்கிறுன் வேணு. "உன்னை நம்பிக்கையாத்தானேடா கூப்பிட்டு வீட்டுக்குள்ளே ஒக்கார வெச்சிக்கிட்டேன். ஒன் திருட்டுப் புத்தியைக் காட்டிட்டியேடா. என் தங்கச்சியையே வளைச்சுப் போட்டுட்டே! இது கொஞ்சமாவது நியாயமாடா? என்ன திமிர் இருந்தா இப்படிச் செய்திருப்பேன்'னு தலைமுடியைக் கொத்தாப் பிடிச்சுக்கிட்டு, 'பளீர் பளீர்'னு நாலு அறை அறைஞ்சிருக்கிறுன்...."

"பின்னே என்னடா சசி? விமலா அவன் கூடப் பிறந்த தங்கச்சியாச்சே, மூர்த்திக்குக் கோபம் வராதா?"

"இதுலே கோபம் வர என்னடா, சிவா இருக்குது? அன்பாலே — காதலாலே இணைஞ்ச உள்ளங்களைப் பிரிக்கிற சக்தி உலகத்திலே யாருக்குமே இடையாதுடா. மூர்த்தி என்னமோ ஊர்லே உலகத்துலே எவனுமே பண்ணுத தப்பை, வேணு பண்ணிட்ட மாதிரி எகிறி எகிறிக் குதிக்




** கடவுள் பக்தி என்பது பூஜை அறையோடு முடிந்து போவதல்ல. கடவுளை நீ எல்லாரிடமும் காண பூஜை உதவ வேண்டும் — உன் எதிரிகளிடமும்கூட!

கிறான்!''

''அட போடா! தங்கச்சின்னு வர்றப்போ அவன் அவனுக்கும் ஆத்திரமாத்தான் இருக்கும். என்ன மாதிரி மாப்பிள்ளைக்குக் கொடுக்கணும்னு அண்ணன்காரன் கனவு கண்டுகிட்டு இருந்தானோ?''

''என்ன சிவா? வேணு என்ன கொலை பாதகமா பண்ணிட்டான்? சரி.... வேறே ஜாதி! இருக்கட்டுமே! இவனுங்க பிரெண்ட்ஸ் ஆகறதுக்கு ஜாதி பாத்தாங்களாமா? அப்புறம் காதலுக்கு மட்டும் எப்படிடா கண்டிஷன் போட முடியும்?''

''சரிடா! என்ன பண்ணணும்னு சொல்றே?''

''புதன்கிழமை காலையிலே வேணுவும், விமலாவும் ரகசியமா பக்கத்து ஊரு முருகன் கோயில்லே கல்யாணம் முடிச்சிக்கிறாங்க. கல்யாணம் நல்லபடியா நடந்து முடியறதுக்கு நீயும், நம்ம நண்பர்கள் ரெண்டு மூணு பேரும் வேணுவுக்குப் பக்கபலமா நிக்கறீங்க. சரியா!''

சசி முடித்துவிட்டான். அந்தக் குரூப்பில் அவன் சொன்னால் சொன்னதுதான்.

**கோ**பி சசியைப் பார்க்கக் கிளம்பிக் கொண்டிருந்தான்.

தத்தட்டார்.... கதவு புயல் வேகத்தில் திறந்து கொண்டது.

குடிகாரனைப் போல, தாறுமாறான தோற்றத்தில் நிற்பது — சசிகுமாரா? கோபிக்கு ஒன்றும் புரியவில்லை.

என்ன ஆயிற்று இவனுக்கு? உடம்பு சரியில்லையா? கண்கள் ஏன் இப்படிச் சிவந்து கிடக்கின்றன?

''அவன் வந்துட்டானா? அந்தத் திருட்டுக் கழுதை சிவா வந்துட்டானா?''

''தெரியாது சசி. நாம் தினமும் சந்திக்கிற இடத்துக்குத்தாண்டா கிளம்பிக்கிட்டிருக்கிறேன். அவனும் அங்குதான் வருவான்.''

''வரமாட்டான். அவனை எல்லாத்தையும் எடுத்துக்கிட்டு, இங்கே வரச் சொல்லியிருக்கிறேன்!''

சசிக்கு மூச்சு இழைந்தது. நாகப் பாம்பின் சீற்றம் தெரிந்தது. ''என்னடா சசி சொல்றே? ஒண்ணுமே புரியலேடா...''

''அவன்... அந்தப் படுபாவி சிவா என் தலையிலே மண்ணை அள்ளிப் போட்டுட்டாண்டா. என்ன திமிர் இருந்திருந்தா அன்னக் காவடிப் பய — ஊரை விட்டு ஊரு பொழைக்க வந்த பய — என் தங்கச்சிக்குக் கத்தைக் கத்தையா லவ் லெட்டர்ஸ் கொடுத்திருப்பான்? சின்னப் பொண்ணு மனசைக் கொழப்பிட்டானே! அவளைக் காதல் ஊதல்னு என்கிட்டேயே சொல்ல வெச்சிட்டாண்டா அந்த ராஸ்கல். எங்க அம்மா தலைதலைன்னு அடிச்சிக்கிட்டு அழுறாங்க.''

''வந்து சசி.... நீ முதல்லே ஒக்காருடா!''

''எப்படிடா முடியும்? படுபாவியை என் கூடப் பொறந்தவனாட்டம் என் வீட்டுக்கு எத்தனை தடவை கூட்டிக்கிட்டுப் போயிருப்பேன்? எங்கம்மா ஒக்கார வைச்சு எத்தனை நாளு சோறு போட்டிருப்பாங்க? இப்படித் துரோகம் பண்ணவாடா நல்லவனாட்டம் என்கூட இழைஞ்சுக்கிட்டு இருந்தான்?''

அடிக்குரலில் உறுமினான் சசி.

''எதுக்கும் நீ நிதானமா...''

''சரிதான் நிறுத்துடா! ஒன் தங்கச்சியா இருந்தா அப்ப என்ன முடிவெடுப்பே? அப்படி நினைச்சுப் பாரு. பேசவந்துட்டான்...''

சிவாவுக்காகக் காத்திருக்கத் தொடங்கினான் சசி — ஆத்திரத்துடன்.

ஓ! அப்படி வேறு ஒரு கோணம் இருக்கிறதா? அப்படி ஒரு நிலை ஏற்பட்டுவிட்டால், தானும் சராசரி அண்ணனாக மாறி விடுவோமோ?

குழப்பத்துடன் கோபி சசிக்கு எதிரில் உட்கார்ந்து கொண்டான். நேரம் நகர்ந்து கொண்டிருந்தது.....

## மாதம் ஒரு மாவட்டம்

# சேலம்



தற்போது நமது நிருபர்களும் புகைப்படக் கலைஞரும் சேலம் மாவட்டத்தில் சுற்றுப் பயணம் செய்து பல்வேறு பிரச்னைகளை ஆராய்ந்து வருகிறார்கள். அவர்கள் எழுதும் பரபரப்பான கட்டுரைகளும் பேட்டிகளும் புகைப்படங்களுடன் மார்ச் 22, 29 கல்கி இதழ்களில் இடம்பெறும்.

# SRICHAKRA

## தீரம் மிக்கச்
## சாதனைக்குப்
## பிரபலமான பெயர்

"சிட்டெனப் பறக்கும்
ஒரு வண்டியை
ஸ்ரீ சக்ரா டயருடன் அளித்தால்
நான் புரிவது
தீரம் மிக்கச் சாதனைதான்"

கபில்தேவ் நிக்கஞ்ச்




TVS **ஸ்ரீசக்ரா** 

டி வி எஸ் நிறுவனம் அளிக்கும் தீரம் மிக்க டயர்கள்

RK SWAMY STL 4580



# நாலு கால் முன்னேறும் சக்கர

முன்பெல்லாம் 'டைம்' பத்திரிகையின் தென்கிழக்கு ஆசிய பதிப்பில் மட்டுமே விளம்பரம் வெளியிட்டு வந்தது பஜாஜ் ஸ்கூட்டர் நிறுவனம். இதைத் தவிர அவர்கள் தயாரிப்புகளுக்கு விளம்பரம் என்ற ரீதியில் அதிகமாக ஒன்றும் செய்யப்படவில்லை. ஆனால் சமீபத்தில் வெளியான இல்லஸ்ட்ரேடட் வீக்லி இதழ் ஒன்றில் அனைத்து விளம்பரப் பக்கங்களையும் குத்தகை எடுத்திருந்தது பஜாஜ்! டி.வி.யிலும் இப்போது நிறைய விளம்பரம் செய்து வருகிறது. இதற்குக் காரணம் உற்பத்திப் பெருக்கம்தான். 1984 ஐக் காட்டிலும் 85—இல் இந்தியாவில் இரண்டு சக்கர வாகனங்கள் தயாரிப்பு 31 சதவிகிதம் உயர்ந்திருக்கிறது. எண்ணிக்கை அதிகரித்துள்ளதோடு ஜப்பானியக்கூட்டுறவு காரணமாக வாகனங்களின் தரமும் உயர்ந்திருக்கிறது.

இந்திய வர்த்தக உலகில் இந்தப் புரட்சிகரமான திருப்பம் ஆரம்பித்தது 1982—இல். இந்த ஆண்டில்தான் நமது இந்திய அரசு விழித்துக் கொண்டு விதிகளைத் தளர்த்தி, அன்னிய நாடுகளின் கூட்டுறவைத் தாராளமாக அனுமதித்ததோடு இத்துறையில் நாற்பது சதவிகிதம் வரை அன்னியச் செலாவணி முதலீட்டையும் அனுமதித்தது. அதேநேரத்தில் இரண்டு சக்கர வாகனங்களுக்கு விதிக்கப்பட்டிருந்த இருபத்தொரு சதவிகித எக்ஸைஸ் டியூட்டியை பத்து சதவிகிதமாகக் குறைத்தது. எல்லாவற்றுக்கும் மேலாக 1985 முதல் லைசென்ஸ் கொள்கையையும் வெகுவாக தளர்த்தி, எளிமைப்படுத்தியது. அதன் விளைவாக, எல்லா இரண்டு சக்கர வாகனங்கள் தயாரிப்புக்கும் வேறுபாடின்றி ஒரே சீரான லைசென்ஸ் கொள்கை உருவாயிற்று. இதனால் ஒரு ஸ்கூட்டர் தயாரிக்கும் நிறுவனத்துக்கு மொப்பெட் அல்லது மோட்டார் சைக்கிள் தயாரிக்கவோ அல்லது ஒரு மோட்டார் சைக்கிள் தயாரிக்கும் நிறுவனத்துக்கு மொப்பெட் தயாரிக்கவோ தனி லைசென்ஸ் பெற வேண்டிய அவசியமில்லாமல் போயிற்று.

இவ்வாறு அரசாங்கக் கொள்கையில் ஆரோக்கியமான மாற்றங்கள் நிகழ்ந்ததால் உற்பத்தி பெருகி, தயாரிப்பாளரே ஆட்சி புரிந்து வந்த ஒரு மார்க்கெட் இன்று நுகர்வோர் மார்க்கெட்டாக மாறியிருக்கிறது. கடைக்குப் போய் நேரடியாக ஒரு மொப்பெட்டையோ, மோட்டார் சைக்கிளையோ இன்று வாங்க முடியும் (பணம் இருந்தால்!). வருடக் கணக்காகக் காத்திருப்பது, ப்ரீமியம் என்று நூற்றுக்கணக்கான ரூபாய்களைச் செலுத்துவது போன்ற தொல்லைகள் இப்போது வெகுவாகக் குறைந்துவிட்டன. பழைய தயாரிப்புகளுக்காக ஆர்டர் கொடுத்துவிட்டு வருடக்கணக்காகக் காத்திருந்த பலர் அந்த ஆர்டர்களை 'கான்ஸல்' செய்துவிட்டு நேரடியாகப் புதிய வண்டிகளை வாங்குகின்றனர்.

இரண்டு சக்கர வாகனங்கள் தயாரிப்புத் துறையில் நிகழ்ந்துள்ள இந்தப் புரட்சிகரமான மாற்றத்தின் எதிரொலியை விளம்பரங்களில் பட்டவர்த்தனமாகக் காணலாம். பொதுவாக, 'இது தரமான தயாரிப்பு' என்று விளம்பரப்படுத்தும் காலம் மாறி, இப்போது ஒவ்வொரு தயாரிப்பிற்கும் ஒரு தனி குணச்சித்திரம் இருப்பதாக விளம்பரப்படுத்துகிறார்கள்.

தயாரிப்பாளர்களிடையே போட்டி அதிகரித்துள்ளதால் வினியோகத்திலும் முன்

Kawasaki-Baj
You can als

YOU'VE SEEN THE CROWD.
NOW MEET THE LEADER.

# பாய்ச்சலில் இரண்டு வாகனத்துறை!



னெப்போதையும்விட அதிக மும்முரம் காட்டுகிறார்கள். *'டைரக்ட் பில்லிங்' முறையில் இயன்ற அளவில் வரிகளைக் குறைப்பதற்கு முயற்சி செய்கிறார்கள். விதவிதமான வாகனங்களைத் தயாரித்து வருகிறார்கள். தற்போது சுமார் ஐம்பது விதங்கள் தயாரிக்கப்பட்டு வருகின்றன. இவை, குறைந்த எரிபொருள் உபயோகிக்கும் தரமான எஞ்சின்கள் பொருத்தப்பட்டு, அதிக கனமில்லாமல் இருக்கின்றன. ஆனால் இந்தியசாலைஅமைப்புகளுக்கு இவற்றால் ஈடு கொடுக்க முடியவில்லை என்பது ஒரு பொதுவான புகாராக இருந்து வருகிறது.

உற்பத்தி பெருகியும் விலை குறையவில்லை என்பது மற்றும் ஒரு குறை. இன்னும் சொல்லப் போனால் கடந்த பத்து வருடங்களில் விலை இரண்டு மடங்காக அதிகரித்துள்ளது. தயாரிப்புச் செலவு நானூறு சதவிகிதம் உயர்ந்திருப்பதைக் காட்டித்தான் இந்த விலை உயர்வை நியாயப்படுத்துகிறார்கள்.

| | தற்போதைய குறைந்த பட்ச விலை | அதிகபட்ச விலை |
|---|---|---|
| மொப்பெட் | ரூ 4000 | ரூ 7000 |
| ஸ்கூட்டர் | ரூ 9000 | ரூ 15400 |
| மோட்டார் சைக்கிள் | ரூ 9000 | ரூ 24000 |

அயல் நாட்டுக் கூட்டுறவில் தயாராகும் நவீன தொழில் நுட்ப வாகனங்களுக்கு அதிகப் பணம் கொடுக்கத்தான் வேண்டியிருக்கிறது. இவற்றை இதே தரத்துடன் நாமே தயாரிக்க முடிந்தால் விலை குறைவதற்கான வாய்ப்பு நிச்சயம் இருக்கிறது.

தயாரிப்பாளர்களிடையே போட்டி அதிகரித்துள்ளதையும், உற்பத்திப் பெருக்கத்தையும் ப்ரீமியம் ஒழிப்பையும், வாகனங்கள் சுலபமாகக் கிடைக்கும் நிலைமையையும் நோக்கினால், எதிர்காலத்தில் நிறைய தயாரிப்பாளர்கள் பாதிக்கப்படுவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது. 1990—ஆம் ஆண்டில் இந்தியாவுக்கு சுமார் 1.8 மில்லியன் வண்டிகள் தேவைப்படலாம் என்று கணிக்கப்பட்டுள்ளது. ஆனால் இப்போதே 3.6 மில்லியன் வாகனங்கள் தயாரிக்கப் பல்வேறு நிறுவனங்களுக்கு லைசென்ஸ் வழங்கியுள்ளது அரசு. ஆக, 1.8 மில்லியன் வண்டிகள் உபரியாகத் தயாரிக்கப்பட்டு விற்பனையாகாமல் நின்று போகும்என்று எதிர்பார்க்கலாம்.

இந்தப் பிரச்னைக்குத் தீர்வு ஏற்றுமதி செய்வதுதான். ஆனால் அதற்கு முன்பு தயாரிப்பாளர்கள் தாய்நாட்டில் தங்கள் நிலைமையை ஸ்திரப்படுத்திக் கொள்ள வேண்டும். ஏற்கெனவே சில சிறு தயாரிப்பாளர்கள் போட்டியைச் சமாளிக்க இயலாமல், வேறு பெரிய தயாரிப்பாளர்களிடம் சரணாகதி அடைந்து அந்த நிறுவனங்களுடன் ஒன்றிவிட்டனர். தற்போதுள்ள 41 தயாரிப்பாளர்களுள் ஐம்பது சதவிகிதத்தினருக்கு எதிர்காலத்தில் இந்தக் கதி நேரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

— சிஷ்யா

* இடைத்தரகர்களுக்குக் கிடைக்கும் கமிஷனைக் குறைக்காமல் அதே நேரத்தில் வாங்குபவரின் பெயருக்குத் தயாரிப்பாளரே நேரடியாக 'பில்' தருவது. டைரக்ட் பில்லிங் முறை.



அவன் வயதோ ஆறுதான்...
செய்வதெல்லாம் குறும்புதான்

அவளுக்குத் தெரியும், வளரும் குழந்தைகளின்
தேவை என்னவென்று!

ஆம்ப்ரோ®
மில்க் பேஸ்
ஊட்டம் நிறைந்த
பிஸ்கெட்



### காட்சி — 1

(அது ஒரு நடுத்தரக் குடும்பம். குடும்பத் தலைவர் சாரங்கன் உள்பட எல்லாரும் வீட்டு ஹாலில் அமர்ந்து டி.வி.யில் 'ஒளியும் ஒலியும்' பார்த்தபடியே மெய்மறந்து போயிருக்கும் வேளை. தாடி—மீசையுடன் கல்யாண புரோக்கர் குருசாமி உள்ளே நுழைகிறார். நான்கு வயது கடைக்குட்டி சத்யா கவனித்துவிட்டு அம்மாவிடம் சொல்கிறான்.)

சத்யா: அம்மா! யாரோ ஒரு சர்தார்ஜி வரார்ம்மா!

புவனா (அலுப்புடன்): ஆமாம்! தாடி வச்ச அத்தனை பேரும் உனக்கு சர்தார்ஜி தான். மொட்டைத் தலையன் மொத்தப் பேரும் ஆண்டிப்பண்டாரம்தான்! யாராவது




ராப்பிச்சைக்காரனுக இருக்கும்... போகச் சொல்லுடி!

குரு: ராப்பிச்சை இல்லே மாமி... நான் தான்!

சாரங்: அடடே, நம்ம புரோக்கர்! வாய்யா, வா! என்ன சமாசாரம்?

குரு: எல்லாம் நல்ல சமாசாரம்தான்... உங்க முதல் பெண் விஜயாவுக்கு ஒரு பிரமாதமான வரன் கொண்டு வந்திருக்கேன்...

சாரங்: புவனா! அந்த டி.வி. சனியனை ஆஃப் பண்ணு. கல்யாணப் பேச்சு பேசறபோது 'ஆடி அடங்கும் வாழ்க்கையடா'ன்னு அபசகுனமா ஏதாவது பாட்டு வந்து தொலைக்கப் போறது!

புவனா: ஆஃப் பண்ணுவானேன்? சத்தத்தைக் குறைச்சு வச்சுட்டாப் போறது!

குரு: மாமிக்கு ஐடியாவெல்லாம் பிரமாதமா இருக்கு!

சாரங்: இப்படிச் சொல்லி நீர் காப்பிக்கு அடி போட வேண்டாம்... வீட்டிலே ஒரு சொட்டுப் பால் கூடக் கிடையாது! சொல்லும், வரன் யாரு?

குரு: ஆபத்சகாயம்னு கேள்விப்பட்டிருக்கீங்களா?

புவனா: யாரு? ஆறுமாசத்துக்கு முன்னாலே பாங்கிக் கொள்ளையிலே பிடிபட்டு ஜெயிலுக்குப் போனாரே — அவரா?

குரு: சேச்சே! இவர் வேறே ஆசாமி... கவர்ன்மெண்ட் காண்ட்ராக்ட் எடுத்து, மூட்டை மூட்டையா சம்பாதிச்சவர்!

சார: ஓ! அந்த ஆபத்தா? கேள்விப்பட்டிருக்கேன். அவர் ஒரு மாதிரியான ஆசாமியாச்சே! அணைக்கட்டு கட்டினார்னு வெந்நீர்லே கரைச்ச வெல்லக்கட்டி போல அது மழையிலே கரைஞ்சே போயிடுமாமே!

குரு: அதுக்குக் காரணம் இருக்கு சுவாமி! ஆற்றிலே போட்டாலும் அளந்து போடக் கூடாதுன்னு அவருக்கு ஒரு கொள்கை... அதனாலே சிமெண்ட், மணல், ஜல்லி எல்லாத்தையுமே விகிதப்படி இல்லாமல் தம் இஷ்டப்படியே போட்டுக் கட்டுவார்!

புவனா: அது எப்படியோ போகட்டும்... நம்ம விஜயாவுக்குப் பார்த்திருக்கிறது அவரோட பிள்ளையா?

குரு: ஆமாம்... ஏழாவது பிள்ளை!

சார: அதிலேயும் அவர் அளவு பார்க்கல்லேன்னு தெரியறது!

குரு: பையன் எலெக்ட்ரானிக்ஸ் எஞ்சினியர். மாசம் மூவாயிரம் சம்பாதிக்கிறான்...

புவனா: நீங்க சொல்றதைப் பார்த்தால் பெரிய இடம்னு தோணறது... அதிகமாச்

சீர், கீர்னு எதிர்பார்ப்புகள் இருக்குமே?

குரு: அதெல்லாம் ஒண்ணுமில்லே... இதோ லிஸ்ட் இருக்கு பாருங்கோ!

சார: என்னது! லிஸ்ட்டா அது! பத்திரிகைகள் கொடுக்கிற இலவச இணைப்பு போலேன்னு இருக்கு!

புவனு: அந்தலிஸ்ட்டைவாங்கிப்படிச்சுத் தான் பாருங்களேன்!

சார: எனக்குத்தான் ஹார்ட் வீக்காச்சே!

குரு: பயப்படவே வேண்டாம்... இதிலே ஆபத்சகாயத்தோட ஆறு பிள்ளைகளுக்கும் வந்த சீர்வரிசை லிஸ்ட் இருக்கு — அது உங்க பார்வைக்காக. கடைசிப் பக்கத்திலே ஏழாவது பிள்ளைக்கு என்ன எதிர்பார்க்கிறார்னு எழுதியிருக்கு!

புவனு: அதை மட்டும் படியுங்கோ, போதும்!

குரு: நகை — நட்டு — பாத்திரம் — பண்டம் — வரதட்சணை இதையெல்லாம் ரெண்டு தரப்பிலேயும் நேரிலே பேசி முடிவு பண்ணிக்கலாம்... இதிலே இருக்கிற ஒரு முக்கியமான நிபந்தனையை மட்டும் படிக்கிறேன்: 'பையனுக்கு ஒரு டூ—வீலர் வாங்கிக் கொடுத்தாக வேண்டும். இந்த நிபந்தனையை நிறைவேற்ற முடியாதவர்கள் சம்பந்தம் பேச வர வேண்டாம்'!

சார: சரி ஐயா! ஒரு சைக்கிள் வாங்கிக் கொடுத்துடறேன்... அதுவும் டூ—வீலர் தானே?

புவனு: ரொம்ப நல்ல இடமா இருக்கு... பையனுக்கும் நல்ல சம்பாத்தியம். நீங்க எதையாவது உளறி, காரியத்தைக் கெடுக்காமலிருங்கோ!

குரு: ஆபத்சகாயம் இருக்காரே — அவர் கூடக் கொஞ்சம் அட்ஜஸ்ட் பண்ணிப்பார். ஆனால் அந்த அம்மா சொன்னால் சொன்னது தான்!

சார: அது சரிய்யா... ஸ்கூட்டருக்கு நான் பத்தாயிரத்துக்கு மேலே எண்ணி வைச்சாகணுமே!

புவனு: அந்த யோசனை, பெண்ணைப் பெறுகிறதுக்கு முன்னாலே இருந்திருக்கணும்!

சார: ஏய் மட சாம்பிராணி! அந்த விஷயத்திலே நான் மட்டுமா குற்றவாளி?

குரு: சிவசிவா! பேச்சு லைன் மாறிப் போறதே! பிரச்னைக்கு வாங்க... ஸ்கூட்டர் வாங்கிக் கொடுக்க முடியும்னு சொல்லுங்க. நாளைக்கே பெண் பார்க்க அழைச்சுண்டு வரேன்!

புவனு: நீங்க அழைச்சுண்டு வாங்கோ... ஸ்கூட்டர் வாங்கிக் கொடுக்கிற பொறுப்பை நான் ஏத்துக்கறேன்!

(சாரங்கன் மனைவியைப் பிரமிப்புடன் பார்க்க, குருசாமி விடைபெற்றுக் கொண்டு செல்கிறார்.)

[illegible]

## காட்சி — 2

**(ஒரு வாரத்துக்குப் பிறகு ஒரு மாலே வேளை. சாரங்கனின் வீட்டில் பெண் பார்க்கும் காண்டத்தில் ரவா கேசரி — வெஜிடபிள் போண்டா வதை படலம் விறுவிறுப்பாக நடந்து கொண்டிருக்கிறது.**

**ஆபத்சகாயத்தின் ஏழாவது பிள்ளை அமுதகுமார், சாரங்கனின் மகள் விஜயாவின் அழகுத் தோற்றத்தில் மயங்கி, கேசரியைச் சட்னியில் தோய்த்து விழுங்கிக் கொண்டிருக்கிறான்.)**

ஆபத்: என்னடா! பொண்ணு பிடிச்சிருக்கா!

அமுத: ஓ யெஸ்! தித்திப்பும் உறைப்புமா இருக்கு டாடி!

சார: என்னது! என்ன சொல்றார் உங்க பிள்ளை!

அமுத (அசட்டுச் சிரிப்புடன்): ஹிஹி... இயற்கை அழகும் செயற்கை அழகும் இணைஞ்சிருக்குன்னு சொன்னேன்!

குரு: அப்பமன்னு 'டெர்ம்ஸ்' பேசி, நிச்சயம் பண்ணிடலாமே!

(ஆபத்சகாயத்தின் மனைவி அம்புஜம் குறுக்கிடுகிறாள்.)

அம்பு: ஸ்கூட்டர் வாங்கித் தரச் சம்மதமான்னு சபையிலே சொல்லிடச் சொல்லுங்கோ!

அமுத: எனக்கு எதுக்கும்மா ஸ்கூட்டர்! வேணாமே!

அம்பு: நீ சும்மா இருடா! குறுக்கே பேசாதே!

குரு: சாரங்கன் சார்! சொல்லிடுங்களேன்!

சார: சரி சரி... நீங்க கேட்டபடியே ஸ்கூட்டர் வாங்கித் தரேன்!

அம்பு: புது ஸ்கூட்டர்தானே?

சார: புத்தம் புதுசுதான்!

அம்பு: எங்க உறவிலே நடந்த ஒரு கல்யாணத்திலே இப்படித்தான் சொல்லிட்டு, யாரோ ஒரு ப்ரெண்டோட ஸ்கூட்டரைக் கொண்டு வந்து சபையிலே நிறுத்திட்டார் பெண்ணோட அப்பா...

புவனு: அடடே! அப்புறம் என்ன ஆச்சு!

அம்பு: கல்யாணம் முடிஞ்சு நாட்டுப் பெண்ணும் ஸ்கூட்டரும் புகுந்த வீட்டுக்கு வந்த மறுநாள் ஒரு தடியன் வந்து, 'என்



** ஏதாவது ஒன்றில் உறுதியாக இருக்க வேண்டும். மூழ்கு! இல்லையேல் கடலின் அடியில் இருக்கும் சத்தியத்தை அடைய முடியாது! தண்ணீரின் மேலேயே மிதந்தால் அது கிடைத்துவிடாது!

# பரிசு ரூ. 200/-

## பொன்மொழிப் போட்டி — 8

இந்த இதழின் உள்பக்க மார்ஜின்களில் ஐந்து பொன்மொழிகள் உள்ளன. கீழே ஐந்து பெயர்கள் தரப்பட்டுள்ளன. எந்தப் பொன்மொழியை யார் சொன்னது? அந்தந்தப் பெயருக்கருகில், வெற்றிடங்களில் பொருத்தம் பார்த்துப் பிழையின்றி முழுமையாக எழுதுங்கள். விலாசத்தைப் பூர்த்தி செய்து இந்த அரைப்பக்கத்தைக் கத்தரித்து அனுப்புங்கள். ஒருவருக்குமேல் சரியாக விடை எழுதினால் பரிசு பகிர்ந்தளிக்கப்படும். உறையின் மேல் 'பொன்மொழிப் போட்டி — 8' என்று அவசியம் குறிப்பிடவும்.



ராமகிருஷ்ண பரமஹம்ஸர்

தாமஸ் கார்லைல்

பெர்னார்ட் ஷா

அரிஸ்டாட்டில்

சத்யசாயிபாபா

**முடிவு தேதி: 11.3.87**

என் பெயர்: ..........................................

விலாசம்: ..........................................

..........................................

ஸ்கூட்டரை எடுத்துண்டு போகலாமா?'ன்னு கேட்டிருக்கான்...'அது என் ஸ்கூட்டர்'னு மாப்பிள்ளை சத்தம் போட, 'நல்ல கதையா இருக்கே! மூணு நாளைக்கு இரவல்னு கேட்டு வாங்கிண்டார் உன் மாமனார்'ன்னு அவன் சீற, ரெண்டு பேரும் சட்டையைப் பிடிச்சுண்டு — ஏக ரகளை ஆயிட்டுது! அப்படியெல்லாம்....

சார: எதுவும் நடக்காதுன்னு உறுதியாச் சொல்றேன்... போதுமா?

அம்பு: அப்பாடி! கவலை விட்டது! நகை, கிகை விஷயங்களை ஆம்பிளைகள் பேசிக்கட்டும்! விஜயா! இப்படிப் பக்கத்திலே வந்து உட்காரம்மா... உன்னைக் கொஞ்சம் க்ளோஸப்பிலே பார்க்கிறேன்!

அமுத: அம்மா! நீ சீக்கிரம் பார்த்து முடி. நான் அவகிட்டே தனியா ஒரு அஞ்சு நிமிஷம் பேசணும்!

அம்பு: பறக்காதேடா அதுக்குள்ளே!

(எல்லோரும் சிரிக்கிறார்கள்.)

### காட்சி — 3

**(பெண் பார்த்துவிட்டுப் போன நிகழ்ச்சியின் விமரிசனம் சாரங்கனின் வீட்டில் கடக்கட நடந்து கொண்டிருக்கிறது. விஜயாவின் தங்கை ரம்யா ஒரு வெஜி—போண்டாவைக் கடித்தபடியே வந்து விமரிசனக் குழுவில் கலந்து கொள்கிறாள்.)**

ரம்யா: பிள்ளைக்கு மாமான்னு ஒரு கிழவர் வந்திருந்தாரே — அவர் ஏதோ காணாததைக் கண்டது மாதிரி கேசரியைப் பிடிப் பிடியா எடுத்து வாயிலே அடைச்சுண்டார்ம்மா! நீ கவனிச்சியோ?

புவனா: சீ! பெரியவர்களைப் பத்தி இப்படியெல்லாம் மரியாதைக் குறைவா பேசக்கூடாது....! பிள்ளைக்கு அத்தையாம் ஒரு லங்கிணி — விஜயா கழுத்துச் சங்கிலியை மூக்காலே மூக்காலே உரசிப் பார்த்தாள். அசல் தங்கமான்னு சந்தேகம் போலிருக்கு அல்பத்துக்கு!

சார: அது சரி... பிள்ளையாண்டான்தான் ஸ்கூட்டர் எதுக்குன்னு கேட்டானே — அதுக்கப்புறமும் எதுக்காக அந்த அம்மா சபையிலே என்கிட்ட வாக்குமூலம் வாங்கினாள்?

விஜயா: விஷயம் தெரியாதா உங்களுக்கு? அவர் என்கிட்டே பேசிட்டிருந்தபோது சொன்னார் — ஸ்கூட்டர் அவருக்கு இல்லையாம்; அவரோட அம்மாவுக்காம்!

சாரங், புவனா, ரம்யா: என்னது! சம்பந்தி மாமிக்கா?

விஜயா: ஆமாம்! லைஸென்ஸ் இருக்காம். ரெடியா ஹெல்மெட் கூட வாங்கி வச்சிண்டிருக்காளாம்!

புவனா: பரமசிவன் கையிலே மண்டை ஓட்டை எடுத்துண்டு அலைஞ்சதுபோல அந்த மாமியும் இந்த வயசிலே ஹெல்மெட்டும் கையுமா அலையப் போறாளாக்கும்... அந்தக் கோலத்தை நினைச்சுப் பார்த்தாலே சிரிப்புச் சிரிப்பா வரது!

•• பேரறிஞன் மூளையிலும் ஒரு முட்டாள்தனமான மூலை உண்டு!

உணர்வுகளை உடையவளாகத்தான் இருப்பாள். பாட்டில் திறமை உடையவள் என்றால் அவள் பாடகியாகட்டுமே. அவள் வாழ்வு அதனால் கெடும் என்று நீ ஏன் நினைக்கிறாய்?''

''இல்லை மார்தா.... உங்கள் நாட்டைப் போல் எங்கள் நாட்டில் அவரவர் விரும்பிய படி, எப்படியானாலும் வாழலாம் என்று இருக்க முடியாது. குறிப்பாகப் பெண்களைப் பொறுத்தவரை நிறையக் கட்டுதிட்டங்கள் உண்டு. பெண்ணை இன்னும் ஒரு போகப் பொருளாகப் பார்க்கிறது சமூகம். அதனால் அவள் சிறிய தவறுகள்கூட மன்னிக்கப்பட மாட்டாது. அவள் trial and error முறையில் எதையும் கற்றுத் திருத்திக் கொள்ள வாய்ப்பே இல்லை.''

''அக்கிரமம்...''

''அதனால்தான் நான் புவனாவுக்காகப் பயப்படுகிறேன். புத்திசாலியான அவள் படித்து முன்னேற வேண்டும். ஏற்கெனவே அவள் பள்ளிப் படிப்பே முடியவில்லை. இரண்டாண்டு காலம் வீணாகப் போய்விட்டது. இவ்வாண்டு பள்ளியிறுதித் தேர்வு எழுதும் சமயம் அவளை மறுபடியும் அவள் தாயார் ஊர் ஊராக இழுத்துச் சென்றிருக்கிறாள். அதோடு பரீட்சை முடிந்த கையோடு, அவளைச் சென்னைக்கு அழைத்துச் சென்று பாடகியாக்கப் போகிறாளாம்.

''புவனாவுக்கு இதில் விருப்பமில்லை என்றால் தாயாருடன் போக மறுக்க வேண்டியதுதானே?''

''மார்தா, புவனாவுக்குச் சரியான முடிவுகள் எடுக்கும் மனப்பக்குவம் இன்னும் வரவில்லை. வாழ்க்கையில் எக்ஸைட்மெண்டுகளை நாடும் பருவம். தன் எதிர்காலத் திட்டங்கள் தனக்கே புரியாத தருணம். பிரபலமாகும் ஆசை, அதோடு வரும் பணம், எதிர்காலம் பற்றிய கனவு, சௌகரியமாக வாழ ஏக்கம், புது அனுபவங்களுக்கான காத்திருப்பு.... இவை சில சமயம் முக்கியமாகத் தோன்றுகிறது. அதேசமயம் தன் செயல்கள் சரிதானா என்ற குழப்பமும் உள்ளது. அவள் தந்தை ஓர் அறிவு ஜீவி. எளிமையான வாழ்க்கைக்குப் பழகியவர்.''

''காந்தியடிகளாக்கும்...?''

''ஆமாம். புவனா அவரை மிகவும் மதிக்கிறாள். அதேசமயம் அவள் தாயாரின் லோகாயதம் அவளுக்குக் கவர்ச்சியூட்டுகிறது. அவள் மிகவும் குழம்பிய நிலையில் கடிதம் எழுதியிருக்கிறாள். அதுதான் யோசித்துக் கொண்டிருந்தேன்.''

மார்தா தன் நீலக் கண்களால் சேகரை உற்றுப் பார்த்தாள். ''சேகர், யூ ஆர் இன் லவ்.''

சேகரின் முகம் சிவந்தது.

''ஏன் வெட்கப்படுகிறாய்? புவனா உனக்குத் தோழி மட்டுமில்லை. அவள் உன் காதலிகூட. காதலில்தான் இத்தகைய அன்பு சாத்தியம். இவ்வளவு அக்கறையிருக்கும்... நான் சொல்கிறபடி செய்.''

''என்ன மார்தா?''

''நீ கிளம்பி இந்தியாவுக்குப் போ. புவனாவைக் கலியாணம் செய்து அழைத்துக் கொண்டு வந்துவிடு. இங்கே அவள் கல்லூரியிலும் படிக்கலாம். பாட்டும் கற்கலாம்.''

''மார்தா உனக்கென்ன பயித்தியமா.... நானே இன்னும் ஆரம்பப் படிப்பில்தான் இருக்கிறேன். அதோடு எனக்குப் பதினெட்டு வயதுகூட நிரம்பவில்லை. புவனாவுக்கோ பதினைந்து வயதுதானிருக்கும். எங்களுக்குத் திருமணமா?''

''திருமணம் செய்து கொள்ள வயது ஒரு தடையா என்ன? பிடிக்கவில்லையென்றால் இரண்டு வருடம் கழித்துப் பிரிந்துவிட்டால் போகிறது. எனக்கு இதைத் தவிர வேறு வழி தெரியவில்லை. ஒன்று செய்யேன், புவனா


The following particulars regarding the ownership of 'KALKI' the Tamil weekly newspaper, are published as called for by Rule 8 of the Registration of Newspapers (Central) Rules 1956.

FORM IV

1. Place of Publication: Madras
2. Periodicity of Publication: Weekly
3. Name of Printer: V. Murali
   Nationality: Indian
   Address: AA-117, Shanthi Colony, Anna Nagar, Madras-600 040.
4. Name of Publisher: V. Vaidyanathan
   Nationality: Indian
   Address: 6-A, Warren Road, Madras-600 004.
5. Name of Editor: K. Rajendran
   Nationality: Indian
   Address: 1, Fifth Street, Lake Area, Nungambakkam, Madras-600 034
6. Names and addresses of individuals who own, the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital. Bharathan Publications Private Limited, 84/1-C, Race Course Road, Guindy, Madras-600 032.

I hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

V. Vaidyanathan
1.3.1987 Publisher


•• ரகசியத்தை வைத்திருப்பவன் அதை மறைத்தால் போதாது; தான் ஒன்றை மறைக்க வேண்டியிருக்கிறது என்பதையே காட்டிக்கொள்ளாமல் மறைக்க வேண்டும்!

# சில்வர் பிளஸ்
# சாதாரண மொபெட்களுடன் இதை ஒப்பிடுவது வெள்ளியையும் ஈயத்தையும் ஒப்பிடுவது போலத்தான்.

சில்வர் பிளஸ்

இது சாதாரண மொபெட் போல சாமானியத் தோற்றம் கொண்டதல்ல. இதன் அழகிய தோற்றம் கண்ணுக்கு விருந்து படைக்கும். அபார செயல் திறனோ ஆச்சரியப்பட வைக்கும்.

பெரிய பைக்கைப் போலவே இதில் கிக் ஸ்டார்ட் உள்ளது. சிக்னல்களில் பச்சை நிறம் வந்ததும் பதைபதைத்து பெடலை உதைக்க வேண்டாம். (உங்கள் பரிதவிப்பைப்பார்த்து மற்றவர்கள் சிரிக்கவும் வேண்டாம்!)

எளிதில் இயங்கும் கியர்கள் அபாரமான பிக்கப்பையும், ஓட்டும்போது உறுதியான பிடிமானத்தையும் அளிக்கின்றன. இதுவும் பெரிய பைக்கின் ஓர் அம்சமே.

2.6 பிஎச்பி 50 சிசி எஞ்சின், சக்தியை வாரி வழங்குகிறது. இருவர் பயணம் செய்யலாம்; மேடுகளில் ஏறலாம் — சிரமமின்றி. (பெரிய பைக்கைப் 'போலவே!) இந்த வேகத்தைக் கட்டுப்படுத்த இருக்கவே இருக்கின்றன விரைந்து செயல்படும் பிரேக்குகள்!

உறுதியான கண்கவர் கலப்பு உலோக (அலாய்) சக்கரங்களும், திடமான ப்ரேமும் பெரிய பைக்கை நினைவூட்டி அதைப் போலவே இதுவும் உழைக்கும் என்ற நம்பிக்கையை அளிக்கின்றன. ஜெர்மன் தொழில் நுட்பம் இந்த நம்பிக்கைக்குத் துணை நிற்கிறது.

ஆனால் ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் சில்வர் பிளஸ் பெரிய பைக்கை போன்றது அல்ல. இது எரிபொருளை எக்கச்சக்கமாக விழுங்காது. ஒரு லிட்டருக்கு 70 கி.மீ. ஓட்டம் கொடுக்கும். எனவே பெட்ரோல் பங்குக்கு அடிக்கடி விஜயம் செய்ய வேண்டிய அவசியமில்லை.

என்பீல்ட் வழங்கிடும் சில்வர் பிளஸ் பெரிய பைக்கின் சிறப்பு அம்சங்கள் கொண்டது. இதை விடுத்து சாதா மொபெட்டுகளில் நீங்கள் பயணம் செய்யலாமா?




## சில்வர் பிளஸ்

அளிப்பது என்பீல்ட்
சாதாரண மொபெட்டுகள்
உங்களுக்கு ஏற்றதல்ல,
எப்போதுமே.

வை இங்கே ஒரு மாறுதலுக்கு வரச் சொல்லேன்."

"அதெல்லாம் சாத்தியமேயில்லை மார்தா. பணம், சுதந்திரம் எல்லாம் எங்களுக்கு மிகவும் குறைவு. எனவே, என்னுடைய குழப்பத்திற்கு நானே பதில் கண்டு பிடிக்கிறேன்."

மார்தா சென்றபிறகு, சேகர் தீவிரமாகச் சிந்தித்தான். கடிதத்தைப் பலமுறை படித்தான்.

"தமிழ்ச்செல்வன் அண்ணன் இன்று அம்மாவுடன் பேசினார். சென்னைக்கு வந்து குடித்தனம் போட்டுவிட்டால், அமைச்சர் என் பாட்டுப் பயிற்சிக்கு ஸ்காலர்ஷிப் ஏற்பாடு செய்து தருவாராம். அப்பா ஒரே வார்த்தையில், 'எனக்குச் சம்மதமில்லை. என்னை மீறி ஏதாவது நடந்தால் நான் பொறுப்புமல்ல' என்று ஒதுங்கிவிட்டார். வீட்டுச் சூழ்நிலை நரகமாக மாறிவிட்டது. கிடைக்கும் வாய்ப்பை நழுவ விட எனக்கு விருப்பமில்லை. இந்த ஊரில் என் முன்னேற்றத்துக்கு வசதியுமில்லை. வீட்டில் சதா சண்டை, புகைச்சல், வீட்டுச் சூழலே நரகமாகிவிடுகிறது சேகர். அப்பா ஏனிப்படிப் பிடிவாதம் பிடிக்கிறார் என்றும் புரியவில்லை. அவரும் சென்னைக்கு மாற்றல் தேடிப் பெற்று விட்டால் ஒரு குழப்பமும் இராது. அமைச்சர் உதவுவார். ஆனால், அப்பாவின் சுபாவம் தான் உனக்குத் தெரியுமே...

"இதன் நடுவில் லோகுவின் வாழ்வு வேறு பிரச்னையாகி வருகிறது. லோகு திடீர் திடீரென்று அழுகிறாள். யாருடனும் பேசுவதில்லை. ஊர்ப் பூசாரி அவளுக்குக் 'காற்று' பட்டிருப்பதாகச் சொல்லுகிறார். எவ்வளவோ பணம் செலவழித்து நேர்த்திகள் செய்தும், அவள் உடல் நிலை தேறவில்லை. பட்டணம் சென்றால், நித்தியா அத்தானையாவது தேடலாம். எப்படியும் அவர்கள் திருமணம் நடந்தால்தான் லோகு பழையபடி ஆவாள். இப்போது பிரச்னை லோகுவைச் சென்னைக்குக் கூட்டிக் கொண்டு போவதா இல்லை அப்பாவுடன் விட்டுச் செல்வதா என்பது. அப்பாவுக்குச் சமைத்துப் போடவும் ஆள் வேண்டுமே..."

சேகர் யோசித்தான். புவனாவுக்கு அரசாங்க ஸ்காலர்ஷிப் கிடைத்தால், அது கட்டாயம் அவள் வளர்ச்சிக்கு உதவும். அவள் அம்மாவின் பொறுப்பில்தானே சென்னை செல்கிறாள். கட்டாயம் பெற்ற மகளை ஞானம்மாமி நன்கு கவனித்துக்கொள்வாள்.

ஆனால் சுந்தரம் ஸாரை நினைத்தால்தான் கவலையாக இருந்தது. எவ்வளவுதான் தர்மவானாக இருந்தாலும், காலத்துடன் மாறாவிட்டால் என்ன பயன்? மகள் வளர்ச்சிக்காகவாவது சென்னைக்குச் செல்வதில் என்ன தவறு? தந்தை என்ற முறையில் குழந்தைகள் முன்னேற்றத்திற்குத் தன் பிடிவாதத்தை விட முக்கியத்துவம் தர வேண்டாமோ? ஆனாலும், சுந்தரம் ஸாரின் நடத்தையின்பின்னணியில்ஏதாவது ஆழ்ந்தகாரணங்கள் இருக்குமோ....?

இப்போதைக்கு அவனால் செய்யக் கூடியது புவனாவுக்குத் தைரியம் அளிக்கும் வகையில் கடிதம் எழுதுவது மட்டும்தான். மார்தா கூறுவதுபோல் புவனாவை இங்கு அழைத்து வருவது மட்டும் சாத்தியமானால்....

சாத்தியமாகும்.... இன்றில்லை என்றாலும் ஐந்து ஆண்டுகளுக்குப் பின்னாவது முடியும். அப்போது புவனா கர்னாடக இசைக் கல்லூரியில் டிப்ளமா பெற்று இருக்கக் கூடும். புவனா சாகித்யம் இயற்ற, அவன் கம்ப்யூட்டரில் அதன் ஸ்வரம் அமைக்க, புதிது புதிதாகச் சங்கீத சிருஷ்டிகளை உருவாக்க, அவர்கள் வாழ்வு, லயமும் ஸ்ருதியுமாக இனிக்கும்.

இப்போதைக்கு புவனாவுக்கு 'பெஸ்ட் ஆப் லக்!'

(தொடரும்)

# என்.டி.ஆரின்





பெருமைப்படலாம்!







* ரகுபதி ராகவ....

நீங்கள் கேட்டவை — தராசு

* ராஜேந்தர்பிரியன், திருச்சி

? முன்னாள் பிரதமர் குல்ஜாரிலால் நந்தா வீட்டில் திருடர்கள் புகுந்து, கேவலம் இரு நூறு ரூபாய் மதிப்புள்ள கதராடைகளை மட்டுமே எடுத்துச் செல்ல முடிந்ததாமே?

! 'யாருக்காகப் பரிதாபப்படுவது, இவ்வளவு சாமானிய நிலையில் உள்ள முன்னாள் பிரதமருக்கா? அல்லது முந்நாள் நந்தாவை இந்நாள் அரசியல்வாதிபோல் எண்ணி விட்ட அந்தத் திருடனுக்கா?' என்று குழப்பிக் கொண்டிராமல், இப்படியும் ஒரு பிரதமர் இந்தியாவில் இருந்திருக்கிறாரே என்று பெருமைப்படலாம்; அதை வெளிக் கொணர்ந்து, மக்களுக்கு உணர்த்தி, விழிப்புணர்வை ஏற்படுத்தியுள்ள திருடனுக்கு நன்றி கூறலாம்.

* இராச. இராகவேந்திரப்பிரியன்,
நீடாமங்கலம்

? ரசித்துப் பார்த்த அயல் நாட்டுச் சினிமா?

! வீர சாகசங்களுடன் நகைச்சுவையும் இணைந்த இரு படங்கள்: 'ஜுவல் ஆஃப் தி நைல்'; 'கிங் ஸாலமன்ஸ் மைன்ஸ்'. இரண்டும் ரசிக்கும்படிதான் இருந்தன என்றாலும் மைன்ஸில் திகைக்க வைக்கும் திடீர்த் திருப்பங்களும் சாகசங்களும் வாய்விட்டுச் சிரிக்கக் கூடிய நகைச்சுவையும் அதிகம். அபார காமிரா. டார்ஜான் கதைகளை எழுதிய ரைடர் ஹகார்ட்ஸ் என்ற புகழ் பெற்ற எழுத்தாளர் எழுதிய இந்தப் பிரசித்தி பெற்ற கதையை, மூன்று காலகட்டங்களில், மூன்று தயாரிப்பாளர்கள் தனித்தனியே மூன்று விதமாகப் படமெடுத்திருக்கிறார்கள் என்பதை எண்ணும்போது, கதையின் சிரஞ்சீவித் தன்மை புரியும். பிடிக்காத விஷயம் பின் வரிசையில் உட்கார்ந்து அட்டகாசம் செய்த குடிகாரர்!

* எம். காமராஜ், திருச்சி

? கே.ஏ. தங்கவேலு, எஸ்.வி. சேகர், சோ ஆகியோர் அடுத்தடுத்து அளித்த டி.வி. தொடர் நாடகங்களில் தங்கள் மனத்தைக் கவர்ந்தது ...?

! வண்ணக் கோலங்களின் இடத்தை இன்னொன்று ஆக்கிரமிக்க மனம் இன்றுவரை ஒப்புதல் தரவில்லை. அதுசரி, 'தரையில் இறங்கும் விமானங்கள்' பார்க்கிறீர்களா? ஜிவ் வென்று ரேட்டிங்கில் உயர்கின்ற விமானம் ஸார் அது!

* வி. முரளி, சென்னை — 15

? கல்கத்தா டெஸ்ட்டில் காவஸ்கர் ஆட மறுத்தது முறையா?

# உடை மாற்றம் குறித்து...?

! தவறு என்று கூற முடியாது. ஆனால் சென்ற தடவை ரசிகர்கள் அநாகரிகமாக நடந்து கொண்டதைத் தம்மால் சகிக்க முடியவில்லை என்று முதலில் காரணம் கூறியவர், பிறகு ஜகா வாங்கி, 'சொந்தக் காரணம்' என்று மழுப்பியதுதான் தவறு. இதை ஏற்க முடியவில்லை.

* போடி ரவிராஜ், மதுரை

? என்.டி. ஆரின் உடை மாற்றம் குறித்து?

! ஆளுனரின், 'ஓ மை காட்! ஹூ இஸ் திஸ் யங் மேன்? டோண்ட் டெல் மி ஹி இஸ் மை சீஃப் மினிஸ்டர்!' என்ற ஆச்சர்யக் கூக்குரலைவிடப் பிரமாதமாக அதை வேறு ஒருவர் வர்ணித்துவிட முடியாது. ஆனால் ஒன்று. இதுபோன்ற ஸ்டண்ட்டுகள் என்.டி. ஆரின் பாபுலாரிடியை அதிகரிக்கலாம். மதிப்பைக் குறைக்கவே செய்யும்.

* பி.பி. குமார், விருத்தாசலம் *

? மருத்துவக் கல்லூரி மார்க் பட்டியல் ஊழல் பற்றி?

! யாரோ ஒரு மாணவனுக்கு உதவ, எல்லோருக்குமே 25-மார்க்குகள் போடப்பட்டதும், ரெகார்டுகளுக்காக எட்டு மார்க்குகள் எல்லாருக்குமே சேர்க்கப்பட்டதும் சென்னை மருத்துவக் கல்லூரிக்கு அழிக்க முடியாத தலைகுனிவு. இதைச் செய்த பேராசிரியரே, தாம் செய்தது தவறு என்று நீதிமன்றத்தில் ஒப்புக் கொள்ள, வழக்கைத் தள்ளுபடி செய்த ஜஸ்டிஸ் மோகன், மருத்துவக் கல்வியின் தரம் தாழ்ந்து போய்க் கொண்டிருப்பது பற்றியும் தேர்வு முறையில் புகுந்துள்ள ஊழல்கள் பற்றியும் வருத்தம் தெரிவித்துள்ளார். இத்தகைய கல்வி முறையில் படித்துத் தேறித் தொழில் புரியப் போகும் டாக்டர்களிடம் வைத்தியத்துக்குப் போகப் போகிற நமது வருங்கால சந்ததியினரை எண்ணிப் பார்க்கும்போது கதி கலங்குகிறது! மார்க்குகள் கூட்டிப் போடப்பட்டதை ஏற்க மறுத்து, வழக்குக்கு வழி வகுத்த துணைவேந்தர் மட்டுமே இந்த சம்பவத்தால் நமது மதிப்பில் உயர்கிறார்.

* ஆர். அருணாசலம், திருவண்ணாமலை

? கல்கத்தா டெஸ்ட்டில் சதம் எடுத்த அஸாருத்தீன் பற்றி...?

! காவஸ்கர் இல்லாத குறையை இட்டு நிரப்பினார் எனலாம். ஆரம்பத்தில் மளமளவென்று விக்கெட்டுகள் சரிய, ஏற்பட்ட கதிகலக்கத்தைத் தடுத்து, நம்பிக்கையை வளர்த்ததோடு, இந்தியா இரண்டாவது இன்னிங்ஸை டிக்ளேர் செய்து, பாகிஸ்தானை வெற்றிக்கு ஆடுமாறு சவால் விட்டு அழைக்க, உதவியது அவர் ஆட்டம். 141 எடுத்த அஸாருத்தீன் அசகாய சூரத்தனம்தான்.

* ஆர். மனோகரன், கொரடாச்சேரி

? காவிரி நீர்ப் பிரச்னை தீர ஆறுகளைத் தேசியமயமாக்க வேண்டும் என்கிறாரே வி.ஆ.பெ. விசுவநாதன்?

! முதலில் இந்தியர்கள் எல்லோரையும் தேசிய மயமாக்க யாராவது முயற்சி எடுத்தால் நல்லது.

* த. ஜெயக்குமார், கொப்பம்பட்டி

? மகாத்மாவை மக்கள் மறந்துவிட்டார்களே என்று ராஜாராம் கவலைப்பட்டிருப்பது பற்றி....?

! மகாத்மா விரும்பிய ரகுபதி ராகவ பாடலில் தம் பெயர் வருவது ஒரு காரணமாக இருக்கலாம்!

* ஆர். கே. அருள்செல்வன், விக்கிரபாண்டியம்

? சமீபத்தில் நெஞ்சை நெகிழ வைத்த சம்பவம்?

! இந்தியாவில் அதற்குப் பஞ்சம் ஏது? ஆந்திரப் பிரதேசத்தில் மூன்றே நாட்களில் ஏழாயிரம் ஆடுகள் இறைவனை மகிழ்விக்கப் பலி இடப்பட்ட கொடூரத்தைக் கூறவா? அல்லது, பூனா மாவட்டத்தின் ஒரு கிராமத்தில் வறட்சி நீங்க, இறைவனைத் திருப்திப்படுத்தும் முகமாக ஒரு சிறுவனைப் பலியிட்டதைக் கூறவா? அல்லது ஆந்திரப்பிரதேசம் நிஜாமதாபாத் மாவட்டத்தில் இன்றைக்கும் குழந்தைப் பருவத்திலேயே கணக்கற்ற பெண்கள் ஊரிலுள்ள பெரிய மனிதர்களுக்குத் திருமணம் செய்விக்கப்பட்டு, அவர்கள் அனுபவித்த பிறகு அச்சிறுமியர் ஊராரின் பொதுவுடைமையாகிற அக்கிரமத்தைக் கூறுவதா?

* த. கிருஷ்ணமூர்த்தி, பொறையார்

? விஞ்ஞானமும் ஆன்மீகமும் இணைகரமா? எதிர்கோணமா?

! ஆன்மீகம் என்பதில் மூட நம்பிக்கைகளைப் போட்டுக் குழப்பிக் கொள்ளாவிட்டால் இணைகரங்கள்தான்.

ரூ 10 பரிசு பெறுகிறவர்:
பி.பி. குமார்,
19, பெரிச்சி சந்து,
விருத்தாசலம்—606 001.

# RT 35 PETROL ENGINES FOR CYCLES AND RICKSHAWS



From the House of Rallis
A trusted name for Quality & Service



RALLIS INDIA LIMITED
BOMBAY / DELHI / CALCUTTA / MADRAS

# காசில்லாமலே வாகனம் வாங்கலாம்!

டூ—வீலர் வாங்க வங்கி கடன் தருமோ? விசாரித்தோம். தேசியமயமாக்கப்பட்ட வங்கி ஒவ்வொன்றில் ஒவ்வொருவிதமாகச் சொன்னார்கள். ஒரு வங்கியில், 'வக்கீல், ஸி.ஏ., டாக்டர் என்று சுய தொழில் செய்பவருக்கு மட்டுமே தருவோம்' என்றார்கள். இன்னொரு வங்கியில் 'உசிதம் போல் தருவோம்' என்றார்கள். அதாவது வண்டி அவருக்கு அவசியம் தேவை என்பதும் கடனைத் திருப்பித் தரும் சக்தி அவருக்கு இருக்கிறது என்பதும் நிரூபணமாக வேண்டும்! வட்டி $17\frac{1}{2}$ சதம். தவணைகள் 20 முதல் 36 வரை.

தனியார் நிதி நிறுவனமான சக்தி ஃபைனான்ஸில் தவணை முறைத் திட்டம் எப்படிச் செயல்படுகிறது? 12 முதல் 36 தவணைகள். 14 அல்லது 15 சதம் வட்டி. வட்டியை முதலிலேயே கணக்கிட்டுப் பங்கிட்டும் விடுகிறார்கள். அசல் குறையக் குறையப் பாக்கி உள்ள கடனுக்கு மட்டுமே வட்டி என்ற முறை கிடையாது. மேலும் மூன்று நிபந்தனைகள் உண்டு. வண்டியின் விலையில் அதிகபட்சமாக 80 சதம் கடன் தருவார்கள்; மீதி 20 சதம் நாம்தான் செலுத்த வேண்டும். ஆர். ஸி. புத்தகத்தில் தவணை முறை விவரம் பதிவு செய்துவிடுவார்கள். மூன்றாவது, கடனைத் திருப்பித் தரும் தகுதி இருக்கிறதா என்று பார்ப்பார்கள்: நாம் வேலை பார்க்கும் நிறுவனம் சம்பளத்தில் பிடித்தம் செய்து தவணை கட்டுகிறதென்றால் விஷயம் ரொம்ப சுலபமாகிப் போகும்.

தவணை முறைத் திட்டம் தவிர, மற்றொரு திட்டம் உண்டு. இதற்கு நீண்ட வாடகைத் திட்டம் என்று பெயர் (Leasing). இந்த முறையில் வாகனம், நிதி நிறுவனத்துக்கே சொந்தமானதாய் இருக்கும். மாதம் தோறும் செலுத்தப்படும் வாடகைப் பணம், வருமான வரி இலாகா அளிக்கும் தேய்மானச் சலுகையாக நிதி நிறுவனத்துக்குக் கிடைக்கும். இதனால் தவணை முறையை விட இதில் வட்டி குறைவு. 12—13 சதம் தான். வாடிக்கையாளர் வட்டி உள்பட வாடகைத் தொகை முழுவதையும் செலவுக் கணக்கில் எழுதிக் கொள்ளலாம். இதனால் வருமான வரி செலுத்துவோருக்கு லாபம். வருமானவரி செலுத்தாதவருக்கு வட்டி குறைவது மட்டுமே லாபம். லீஸிங் முறையில் முழுத் தொகையும் செலுத்தப்பட்ட பிறகு, ஒரு சிறு தொகையை வாகனத்தின் விலையாகப் பெற்றுக் கொண்டு வண்டியின் உரிமையை வாடிக்கையாளருக்கே மாற்றிக் கொடுத்து விடுகிறார்கள்.

## இன்ஷூரன்ஸ்:

இன்ஷூரன்ஸ் சான்றிதழ் இருந்தால்தான் ஆர்.ஸி. புத்தகம் முழுமையடைந்ததாகும். தேர்ட் பார்ட்டி, காம்ப்ரஹென்ஸிவ் என்று இரு வித இன்ஷூரன்ஸ் திட்டங்கள் உண்டு. காம்ப்ரஹென்ஸிவ் பாலிஸியில் தேர்ட் பார்ட்டி இன்ஷூரன்ஸும் அடங்கி விடுவதுடன் மேலும் சில அனுகூலங்கள் உண்டு. பிரீமியம் அதற்கேற்ப அதிகமாகத்தான் இருக்கும். இன்ஷூர் செய்யும்போது உண்மையான மார்க்கெட் விலையைக் கூறுவதே நல்லது. பிரீமியம் குறைய, வாகனத்தின் மதிப்பைக் குறைத்துச் சொல்லலாம். ஆனால் நஷ்ட ஈடு கோர வேண்டிய சந்தர்ப்பம் நேர்ந்தால் அப்போது கஷ்டமாக முடியும்.

எதற்கு இன்ஷூர் செய்ய வேண்டும்? மோட்டார் வாகனச் சட்டம் கட்டாயப்படுத்துகிறது என்பது ஒருபுறமிருக்க, நீங்கள் ஒரு நபர் மீது அல்லது பிறர் சொத்து மீது இடித்துச் சேதம் ஏற்படுத்தினால், அவர்கள் நஷ்ட ஈடு கோரி உங்கள் மீது வழக்குத் தொடுத்தால் என்ன செய்வீர்கள்? அதைத்தான் இன்ஷூரன்ஸ் கவனித்துக் கொள்கிறது. விபத்து ஏற்படும் பட்சத்தில் போலீஸுக்கு மட்டுமின்றி உடனடியாக இன்ஷூரன்ஸ் நிறுவனத்துக்கும் தெரியப்படுத்தி விடுங்கள். இன்ஷூரன்ஸ் கம்பெனியிடம் விபத்து—ரிப்பேர் என்று பணம் ஏதும் நீங்கள் வசூலிக்காத பட்சம், ஒவ்வொரு வருஷமும் பிரீமியமில் சிறப்புத் தள்ளுபடி உண்டு.



• பி. ராஜகோபால்

## யோசனைகள்:

ஸ்ரீலக்ஷ்மி கன்ஸாலிடேட்ஸ் தலைவர் பி. ராஜகோபால் கூறுகிறார்: 1. செப்டம்பர் '86 வாக்கில் ரிசர்வ் வங்கி அனுப்பிய சுற்றறிக்கையின்படி, தனிநபர்கள் தவணை முறையில் வாகனங்கள் வாங்க, அரசுடைமையான வங்கிகள் உதவ முன் வந்திருந்தால், மிக அதிக அளவில் வாகனங்கள் தேங்கிக் கிடக்காமல் விற்பனை பெருகி இருக்கும். எங்களைப் போன்ற நிதி நிறுவனங்கள், பெரிய முதலீடு தேவைப்படும் போக்குவரத்துத் தொழிலில் மட்டும் கவனம் செலுத்தியிருப்போம். ஆனால் அரசுடைமையான வங்கிகள் எல்லாமே மேற்படி சுற்றறிக்கையை அலட்சியப்படுத்திவிட்டன. 2. நூறு ஸி.ஸி. வரையிலான வாகனங்களை மத்திய தர வகுப்பினரே உபயோகிக்கின்றனர். எக்ஸைஸ், விற்பனை வரிகளில் சலுகை காட்டப்பட வேண்டும். ஆனால் நமது அரசு, சைக்கிளில் பொருத்தப்படும் மோட்டார்களுக்குக் கூடத் தீர்வை வசூலிக்கிறது. 3. நகருக்குள் ஓடும் வாகனங்களுக்கு வேகத்தைக் கட்டுப்படுத்தும் 'கவர்னர்' சாதனம் பொருத்துவதைக் கட்டாயமாக்க வேண்டும். 4. வாகன வரி வசூலில் பெரும்பகுதியைச் சாலைகளைச் சீரமைக்கவே பயன்படுத்த வேண்டும். விபத்துக்கள் குறையவும் வாகன உற்பத்தி அதிகரிக்கவும் இவையே வழிகள்.

— சாருகேசி

'ராஜாஜி வாழ்க்கை வரலாறு' மற்றும் 'வாழ்க்கை வளம் பெற' ஆகிய தொடர்கள் அடுத்த இதழில் இடம்பெறும்.

பாண்டியனைப் பார்த்ததும் வாசலுக்கு இறங்கினாள் இந்திரா.

''நந்துவைப் பார்த்தீங்களா?''

''பார்த்தேனே....'' என்றான் பாண்டியன், உற்சாகத்துடன். போலி உற்சாகம்.

''காலையில்ஏன் அப்படிகாணாமல்போயிட்டானாம்? கேட்டீங்களா?''

''உன்னைப் பாத்தா கோயில் சிலை மாதிரி இருக்கு இந்திரா...'' என்றான் பாண்டியன்.

''மொதல்லே உள்ளே போலாம் வாங்க.''

விளக்கு வெளிச்சத்தில் இந்திரா ஜொலித்

''கூப்டுவாங்க... சீக்கிரமே கூப்டுவான். இன்னும் கொஞ்சம் கூட்டு வெக்கட்டுமா. எப்ப வரானாம் வீட்டுக்கு?''

''ரெண்டு மூணு நாள்ல கொண்டு வந்து விடறேன்னு தங்கராஜ் சொன்னான்.''

வெற்றிலே மடித்துக் கொடுக்கும் போதும் நந்தகுமார் துரத்தினான்.

''நாளைக்கு நான் அவனுக்குப் புடிச்ச பருப்புருண்டைக் குழம்பும் சோறும் தரேன்... தங்கராஜுக்கும் சேர்த்துத்தான்... ஃபாக்டரிக்குப் போய்க் கொடுத்திட்டு வர்றீங்களா?''

# சின்னச் சின்ன

தாள்.

பாண்டியனுக்குக் கைகள் பரபரத்தன. கையை நீட்டி, அவளைத் தொட்டு, அருகில் இழுத்து — வேண்டாம்! என்று முடிவை மாற்றிக் கொண்டான்.

''நான் கேட்டதுக்கு நீங்க பதிலே சொல்லலையே?''

''என்ன கேட்டே இந்திரா?''

''ஏன் அப்படி காணாமப் போயிட்டானாம்?''

அவளுடைய கவனம் நந்தகுமாரை இன்னும் வட்டமிட்டுக் கொண்டிருப்பதைப் பாண்டியன் புரிந்து கொண்டான்.

''சூபர்வைசர் அதட்டினாராம், வேலைக்குப் போகாமல்இங்கேஏன்நிக்கறேன்னு. அதான் ஓடிட்டானாம்.'' பொய் சொல்லும் போது அவளைப் பார்க்கவில்லை. பின்னால் சென்று கை, கால் கழுவிக் கொண்டு வந்தான்.

பாண்டியன் சாப்பிட உட்கார்ந்தான். இந்திரா அடுத்த கேள்வியைத் தொடுத்தாள்.

''பக்கோடா சாப்பிட்டானா?''

'ஹெக்' என்று விக்கல் எடுத்தது பாண்டியனுக்கு. இந்திரா சட்டென்று நெருங்கி அவன் தலையை மென்மையாகத் தடவினாள்.

''மெதுவாச் சாப்பிடுங்களேன். காலைல தான் வேலைக்கு ஓடணும்... இப்ப என்ன அவசரம்?'' என்று கேட்டுத் தண்ணீர் தம்ளரை எடுத்து அவனிடம் நீட்டினாள்.

பாண்டியன் தண்ணீரை 'மடக் மடக்' என்று குடித்து, இன்னொரு முறை இருமி, கண்களில் நீர் பொங்கித் தத்தளிக்க, இந்திரா அவன் நெஞ்சை நீவி விட்டாள்.

''நந்து நெனைச்சுக்கறானோ என்னவோ?'' என்றாள். ''பக்கோடா பிடிச்சுதா அவனுக்கு?''

''வெங்காயம்லாம் போட்டு எங்கம்மா பண்ணின பக்கோடாண்ணே, எங்கம்மா பண்ணின பக்கோடாண்ணேன்னு சொல்லிச் சொல்லிச் சாப்புட்டான். என்னை அப்பான்னு ஒரு வார்த்தை கூப்ட்டிருக்கலாம்.... அது இல்ல...''

''தங்கராஜ் இன்னும் வேலைக்குப் போகலியாம்... நானும் பட்டாசு ஃபாக்டரிக்குப் போகணும்... நீ போய்க் குடேன், இந்திரா. நந்துவையும் பார்த்த மாதிரி இருக்கும். உன் கையால் அவனுக்குச் சாதம் போட்ட மாதிரியும் இருக்கும்.''

பாண்டியனுக்கு வேறு என்ன சொல்வது



என்று புரியவில்லை. ஆனால் ஃபாக்டரி என்றதும் இந்திராவின் உடலில் லேசான சிலிர்ப்போடியது. மாயகிருஷ்ணனின் முகம் நினைவுக்கு வந்தது. அந்த முகத்தில் ஒநாய் ஒன்று காத்திருப்பது போல் பட்டது.

''உங்க மேல் கோவம் தீரட்டுங்க மொதல்ல. அது தீர்ந்துடுச்சுன்னா அவனே என்னைப் பார்க்க வருவான். சாப்பாட்டு வேளைக்கு நீங்க ஒரு தரம் அவனை எட்டிப் பார்த்துட்டுப் போயிடுங்களேன்,'' கண்கள் கெஞ்சின.

''சரி, செய்ஞ்சு கொடு. கொண்டு போறேன்'' என்றான் பாண்டியன். ''இப்ப மொதல்லே போய்ச் சாப்புடு.''

''கலெக்டரு...'' தங்கராஜ் இருட்டில் கைநீட்டி நந்தகுமாரின் தலையைத் தொட்டுத் தடவினான். ''தூங்கிட்டியா?''

''இல்லே'' நந்தகுமார் படுக்கையில் ஒருக்களித்துக்கொண்டான். தலையணை நனைந்திருந்தது.

''உங்கம்மா மேல் உனக்கு ஆசையில்லியா

# கனவுகள் 18




கலெக்டரு?''

''இருக்குண்ணே... கொள்ளை ஆசை... எப்படி எப்படியோ வச்சுக் காப்பாத்தணும்னுதான் இந்த வேலையே சேர்ந்தேண்ணே...'' நந்தகுமாரின் குரல் கம்மியிருந்தது.

''அப்புறம் ஏன் அம்மா ஆசையோட பண்ணி அனுப்பின பக்கோடாவைத் துப்பினே? நீ இல்லாம அம்மா எவ்வளவு கஷ்டப்படும் தெரியுமா? நீ எப்படியிருக்கே, என்ன சொன்னே, ஏது பண்ணினேன்னு இந்நேரம் பாண்டி அண்ணனைத் தொளைச்சுக்கிட்டு இருக்கும்... இப்படி ஓர் அம்மா எனக்கு இல்லாமப் போயிட்டாங்க கலெக்டரு...'' தங்கராஜின் குரல் குறைந்து போனது. ''நீ நாளைக்கு ஒரு நடை அம்மாவைப் போய்ப் பாரு... அப்புறம் அம்மா கூட இருக்கணும்னு தோணிச்சின்னா அங்கேயே இரு...''

''ஏண்ணே... நான் இருக்கிறது உங்களுக்குக் கஷ்டமா இருக்கா?''

''வெச்சா குடுமி, சரைச்சா மொட்டைடா உன் கேஸு... உங்கம்மாவைப் போய்ப் பாருன்னுதானே சொன்னேன்... இங்கே இருக்க வேணாம்னா சொன்னேன்?''

''ஏன்? பையன் வேணும்னா அவங்க வந்து பாக்கறது...?''

''வந்து பாப்பாங்க கலெக்டரு. உன் கோவமெல்லாம் காணாமப் போயிருச்சின்னு ஒரு வார்த்தை சொல்லு... என்ன கலெக்டரு? பேச்சையே காணும்?''

''..............''

''கலெக்டரு, அம்மாங்கறது தெய்வத்துக்குச் சமம். என்னை மாதிரி அம்மா அப்பா ரெண்டு பேரையும் சின்ன வயசிலேயே சுடுகாட்டுக்கு அனுப்பிட்டா, யாரைக் கோவிச்சுப்பே கலெக்டரு?''

நந்தகுமார் அதற்குமேல் துக்கம் தாங்க மாட்டாமல் தங்கராஜின் மார்பில் முகத்தைப் புதைத்துக்கொண்டு குலுங்கிக் குலுங்கி அழ ஆரம்பித்தான்.

மறுநாள், ஃபாக்டரியில் நந்தகுமாருக்கு,

கெமிக்கல் ரூமிற்குப் போகும் வாய்ப்பு வந்தது. சூபர்வைசரே அழைத்துப் போனபோது ஆச்சரியமாயிருந்தது. அன்றைக்கு மருந்து ரூம் பக்கம் ஏன் வந்தாய் என்று உருட்டுக் கட்டையை வைத்து மிரட்டினார்களே என்று கொஞ்சம் சந்தேகமாய் இருந்தது.

"கோபாலைத் தெரியுமில்ல?" சூபர்வைசர் கேட்டார்.

"மருந்து காய்ச்சற எடத்தில இருப்பானே..." நந்தகுமாருக்கு அடையாளம் தெரிந்தது.

"அவன்தான்... ஒரு வாரம் லீவுல போறான்... நீதான் இனிமே மருந்து காய்ச்சற சாமானெல்லாம் எடுத்துக் கொடுக்கணும், தெரியுதா?"

"சரிங்க..."

"ஒரு பக்கெட்டு மருந்து காய்ச்ச என்னென்ன வேணும், தெரியுமா ஒனக்கு?"

நந்தகுமார் விழித்தான். பொன் பிரவுனாக மருந்துக் கலவையைப் பார்த்திருக்கிறானே தவிர, என்னென்ன போடுவார்கள் என்று அவனுக்கு அது வரை தெரியாது.

"பொட்டாஷியம் குளோரேட் ஏழு கிலோ, கறுப்பு மான்கனீஸ் ஒண்ணரைக் கிலோ, செகப்பு மாங்கனீஸ் அரைக் கிலோ, கூட கண்ணாடித் தூளு ஒண்ணரை கிலோ...

"இருங்க, இருங்க, வேகமாச் சொன்னா எனக்குப் புரியலே. ஒரு நிமிஷம் வந்துடறேன்..." நந்தகுமார் பாக்கிங் ரூமுக்கு ஓடி, ஒரு தாளையும், பாதிப் பென்சிலையும் எடுத்து வந்தான். "இப்பச் சொல்லுங்க."

சூபர்வைசர் அவனை ஆச்சரியமாகப் பார்த்தார். "உனக்கு எழுதப் படிக்கத் தெரியுமாடா?"

"தெரியுங்க. பொட்டாஷியம் குளோரேட் ஒண்ணரை கிலோ..."

"ஒண்ணரை இல்ல, ஏழு கிலோ... இத பாரு. மொத்தம் ரெண்டு கெமிக்கல் ரூம் இருக்கும். மஞ்சக் கலர்ல சல்பர் இருக்குது பாரு. அதைத் தனியா வச்சிருப்போம்.... க்ளோரேட்டோட சேர்ந்திச்சு — அவ்வளவுதான் டமால்னு தீவாளி மாதிரி எல்லாம் வெடிச்சுடும், ஜாக்கிரதை..."

"சல்பர்னு சொன்னீங்களே, அந்த ரூமுக்குப் போனா தடியை வச்சுக்கிட்டு ஒரு ஆளு நிப்பாரு இல்லே?"

"என்னது, என்னது—தடியை வச்சுக்கிட்டு ஆளா—என்னடா சொல்றே நீ?" சூபர்வைசர் திகைத்துக் கேட்டார். அவன் முதுகுக்குப் பின்னால் பார்த்து, "வாங்க, பாண்டியன், என்ன இந்தப் பக்கம்? பையனைப் பார்க்க வந்தீங்களா, டேய் — போடா, சாப்பிட்டு வா..." என்றார்.

பாண்டியன் என்ற பெயரைக் கேட்டதுமே நந்தகுமாரின் முகம் சுருங்கியது.

"வா, நந்து, சாப்பிடலாம்..." பாண்டியன் புன்முறுவலோடு நின்றான்.

"நான் டிபன் கொண்டாந்திருக்கேன்" என்றான், நந்தகுமார். போய்த் தன் டிபன் டப்பாவை எடுத்துக்கொண்டான். தங்கராஜ் ஹோட்டலில் வாங்கிக் கொடுத்திருந்த

# 100% SECURITY AND ATTRACTIVE INTEREST RATE ON YOUR INVESTMENTS

1 BANK CASH CERTIFICATE GUARANTEED FDS.

2 GOVERNMENT COMPANIES CASH CERTIFICATE GUARANTEED FDS

3 SHORT TERM FDS

4 REGD MORTGAGE GUARANTEED FDS WITH PROPERTY PROTECTION

5 RMG FD WITH PP DOUBLES YOUR INVESTMENT IN 36 MONTHS

6 RD A/C's BASED ON PROPERTY

7 RMG RETIREMENT BENEFIT SCHEME WITH PROPERTY PROTECTION

## HINDUSTHAN FINANCE

12 RAMASWAMY STREET
T. NAGAR, MADRAS - 17

சென்னையின் 50 சிறந்த பகுதிகளில் அரசு அங்கீகாரம் பெற்ற வீட்டு மனைகள் ரூ 5,000 முதல் பல லட்சங்கள் வரை

சென்னையின் 70 சிறந்த பகுதிகளில் FLATகள், வீடுகள் ரூபாய் 1 லட்சம் முதல் பல லட்சங்கள் வரை

வீடு, மனை, FLAT வாங்க பிரத்யேக கடன் வசதிகள்




## MURALI'S ESTATS

12 RAMASWAMY STREET
T. NAGAR
MADRAS-17



**சிவப்பு விளக்கு!**

[illegible]

இட்லி, டிஃபன் பாக்ஸில் காய்ந்து போயிருந்தது.

"ஒரு நாளைக்கு என் கூடத்தான் சாப்பிட வாயேன்." பாண்டியன் விடாமல் புன்னகை செய்தான். உரிமையோடு நந்தகுமாரின் கையைப் பற்றி இழுத்தான். தங்கராஜ் இரவு படித்துப் படித்துச் சொன்னதெல்லாம் நந்தகுமாரைக் கொஞ்சம் மாற்றியிருந்தது. அதிக ஆட்சேபமில்லாமல் பாண்டியனுடன் நடந்தான்.

வெளியே மரத்தடியில் உட்கார்ந்தார்கள்.

"நந்தூ... என்னைப் பாரு..."

நந்தகுமார் யோசித்து நிமிர்ந்தான்.

"நீ நல்லா இருக்கணும். உங்கம்மா சந்தோஷமா இருக்கணும்னு நெனைச்சுத்தான் நான் உங்கம்மாவைக் கட்டிக்கிட்டேன். உனக்கு அது புடிக்கலே, இல்லே?"

நந்தகுமார் பார்வையைத் திருப்பிக் கொண்டான்.

"இன்னும் உன் கோபம் மாறலே. என்னாலே, உம்மேல உயிரா இருக்கிற அம்மாவையும் ஒதுக்கிட்டே... உங்க ரெண்டு பேரையும் பிரிச்ச பாவம் எனக்கு வேணாம்... நீ நம்ப வீட்டுக்கு வந்துடு... நான் எங்கேயாவது வெளியே இருந்துக்கறேன்..."

"நீங்க ஒண்ணும் தனியாப் போகவேணாம்" என்றான் நந்தகுமார், மெல்லிய குரலில்.

"அம்மா மேல் கோபம்லாம் போய்ட்டுதா, இருக்குதா?"

"கொஞ்சம் இருக்கு..."

"அதனாலதான் பக்கோடாவை வெளிய வந்து துப்பினியா? நான் பார்த்துக்கிட்டுத்தான் இருந்தேன்... இதப் பாரு, உனக்குப் புடிக்கும்னு பருப்புருண்டைக் கொழம்பு பண்ணிக் கொடுத்திருக்குது உங்கம்மா... சாப்புடறேன்னு சொல்லு, ரெண்டு பேரும் சேர்ந்து சாப்புடுவோம்... இல்லியா, அப்படியே நாய்க்கு வெச்சிடலாம்... என்ன சொல்றே?"

"சாப்புடறேன்" என்றான் நந்தகுமார்.

பாண்டியன் உருட்டிக் கொடுத்த முதல் கவளத்தை வாயில் போடும்போது, அவன் கண்ணீரும் அதில் சேர்ந்து, மிக ருசியாக இருந்தது.

**மா**லையில் நந்தகுமார் வீட்டுக்குப் போகும் போது, மனத்தில் சிட்டுக்குருவி சிறகடித்தது. எப்போதோ கேட்ட சினிமாப் பாட்டின் மெட்டு வாயில் இழுபட்டது.

தங்கராஜ் ஷேவ் செய்து கொண்டிருந்ததைப் பார்த்து ஆச்சரியப்பட்டான்.

"என்னண்ணே திடீர் ஷேவிங்?"

"ஒண்ணுமில்லே கலெக்டரு... நாளையிலேர்ந்து வேலைக்குப் போலாம்னு பாக்கறேன். நீங்க ரொம்ப குஷியா இருக்காப்ல இருக்கு?"

"நீங்க சொன்ன மாதிரி நடந்துக்கிட்டேன் இன்னைக்கு..."

"அட, அட, என்ன பண்ணே?" தங்கராஜ் கண்ணாடி வழியே பார்த்தான்.

"அம்மா எனக்காகப் பருப்புருண்டைக் கொழம்பும், சோறும் குடுத்தனுப்பியிருந்தாங்க. சாப்ட்டேன்."

"போடு சக்கை" தங்கராஜ் ஷேவிங்கை நிறுத்தி விட்டான். "அம்மாவா கொண்டு வந்தாங்க."

"இல்ல... அவருதான்."

"யாரு?"

"உங்க பாண்டி அண்ணன்..."

"ஓஹோ... உறவு முறை வெச்சிச் சொல்ல மாட்டீங்க... போவட்டும். விடுங்க. நம்பளைத் தான் கணக்குல சேர்த்துக்கலே—இந்நாளுக்கு எல்லாம் ஓட்டல் சாப்பாடு போதும்னு நெனைச்சிட்டே? அதுக்குள்ள மூஞ்சி ஏன் வாடிப் போகுது?... வெளையாட்டுக்குச் சொன்னேன், கலெக்டரு!"

"அண்ணே... அப்புறம் ஒரு விஷயம்..."

"என்னடா? அம்மாவைப் பார்க்கணுமா... போலாமா, இப்பவே?"

"அதில்லேண்ணே... நான் உங்க வீட்லயே டேரா போட்டுட்டேன். நான் சாப்ட்டதுக்குல்லாம் எவ்வளவு காசாயிருக்கும்?"

"இப்ப எதுக்குடா அந்தக் கணக்கு?" தங்கராஜின் நெற்றி சுருங்கியது.

"ஏதோ என்னால முடிஞ்சதை உண்டியல் பணத்திலேர்ந்து எடுத்துக் கொடுக்கலாம்னு தாண்ணே..."

"என்ன கலெக்டரு, இப்படிப் பொசுக்குன்னு சொல்லிட்டே? என்னை வெத்து மனுஷனு நெனைச்சுப் பேசறே இல்லே?"

"தப்புண்ணே... தப்பு... தப்பு..." நந்தகுமார் பதறினான். கொஞ்சம் தயங்கி விட்டு, "உண்டியல்லே எவ்வளவு சேர்ந்திருக்கும் அண்ணே?" என்றான்.

"கலெக்டரு, என்னமோ ஆய்டிச்சு உனக்கு..." தங்கராஜ் முகத்தைத் துடைத்துக் கொண்டு பரணிலிருந்து உண்டியலை எடுத்தான்.

"உங்கம்மா கல்யாணத்தில உங்க மாமா கொடுத்த மொய்ப்பணம், நான் கொடுத்த மொய்ப்பணம், நீ வேர்வை சிந்திச் சம்பாரிச்சது. எல்லாம் நூத்தி இருவது ரூபாய்க்கு மேல இருக்கு, கலெக்டரு."

"அந்தப் பணத்தை எடுத்துட்டுப் பொறப்படுங்கண்ணே... அதுக்கு இப்ப செலவு வந்திரிச்சி..." என்றான் நந்தகுமார், தங்கராஜை இறுக அணைத்துக் கொண்டு.

(தொடரும்)

** சுதந்திரத்துடன் கூடவே பொறுப்பு இணைந்திருக்கிறது. எனவேதான் ஏராளமான பேர் சுதந்திரமாகச் சிந்திக்கவும் செயல்படவும் தயங்குகின்றனர்.



சென்னை, ரிசர்வ் பாங்க், டெபுடி சீஃப் ஆபீஸர்,

திரு. G.R.ஜெயச்சந்திரன் அவர்களின் குமாரன் சிர. **J.பாலாஜி** M.A.

(ஆபீஸர், சென்ட்ரல் பாங்க் ஆப் இந்தியா, சென்னை)க்கும், பெரியகுளம் ஸ்ரீ A.S.கிருஷ்ணமூர்த்தி,

(நிலச்சுவான்தார் & ஜெனரல் மெர்ச்சென்ட்) அவர்களின் குமாரத்தி சௌ. **K.வனிதா** B.A.க்கும்

2.2.1987 திங்கட்கிழமையன்று பெரியகுளம் N.S.N. ரத்னவேல் சரஸ்வதி கல்யாண மண்டபத்தில் திருமணம் நடைபெற்றது. அதனைத் தொடர்ந்து 13.2.1987 அன்று சென்னையில் குசலாம்பாள் கல்யாண மண்டபத்தில், கிஷோர் யங் ஸ்டார்ஸின் மெல்லிசை நிகழ்ச்சியுடன் வரவேற்பும் நடைபெற்றது. மிகவும் சிறப்பாக நடைபெற்ற இத்திருமணத்திற்கும், வரவேற்பிற்கும், உறவினர்களும், நண்பர்களும், பிரமுகர்களும் திரளாக வந்திருந்து மணமக்களை வாழ்த்தினர்.

# உள்ளக் குமுறலின் உணர்ச்சி வடிவம்!

• தங்கள் தலையங்கத்தை மதிக்க வேண்டியிருந்தாலும், ஏற்க முடியாது என்று தங்கள் பாணியிலேயே கூற வேண்டியுள்ளது. இப்போது நம்முன் உள்ள பிரச்னை, 'கருணாநிதி குற்றவாளியா?' என்ற ஆராய்ச்சி அல்ல. இந்தி சம்பந்தமாக அரசியல் சட்டத் திருத்தம் பெற அகில இந்திய ரீதியில் உருப்படியாகச் செயல்பட வேண்டும். பக்கத்திலுள்ள தென் மாநிலங்களின் மக்களைக் கூட இழுக்காமல் நாம் என்ன சாதிக்க முடியும்?

சென்னை—5, எஸ். வாணிசங்கர்.

• 'கருணாநிதி குற்றவாளியா?' என்ற தலையங்கம் நடுநிலை உணர்வோடு எழுதப்பட்டுள்ளது. "தேசிய மாண்பு அவமதிப்புத் தடைச் சட்டத்தின்" (The Prevention of Insults to National Honour Act 1971) 3—வது பிரிவின்படி, அரசியல் சாசனத்தை எரித்தல்—அழித்தல் போன்ற செயல்கள் இழிவுபடுத்தும் எண்ணத்துடன் இருக்க வேண்டும். எரித்தல் மட்டுமே குற்றமாகி விடுவதில்லை; இழிவுபடுத்தும் கருத்துடன் எரிப்பதே குற்றமாகும். இதனைச் சட்டப் பிரிவின் வாசகம் தெளிவாகக் காட்டுகின்றது. மேலும், பொதுவாகவே, குற்ற இயல் சட்டத்தின் அடிப்படை விதி, "குற்ற மனம் இல்லாமல் குற்றச் செயல் இல்லை" என்பதாகும்.

இந்த நகலெரிப்புப் போராட்டத்தில் விதிக்கப்பட்ட தண்டனைத் தீர்ப்புகள் எல்லாம், "எரித்த செயலே அவமதித்தல் ஆகிவிடுகிறது" என்ற தவறான அடிப்படையில் விதிக்கப்பட்டவை.

மா. சண்முக சுப்பிரமணியன்,
வழக்குரைஞர், சட்டப் பேரவை
சென்னை—40. முன்னாள் செயலாளர்.

• திருக்கண்ணபுரம் வெங்கடாஜலபதி கோவில் சிற்பங்களை அப்படியே தத்ரூபமாகப் படம் பிடித்து நேரில் காண்பதைப் போன்ற பிரமையை ஏற்படுத்திவிட்டீர்கள். கட்டுரையின் முடிவில் சிந்தனையைத் தூண்டும்படியாகக் கேட்டீர்களே ஒரு கேள்வி! சம்பந்தப்பட்டவர்களுக்கு உறைத்தால் சரி!

அரூர். மு. மதிவாணன்.

• திருக்கண்ணபுரம் கோவில் சிலைகளைத் திராவிட கழகத்தின் மும்முரமான நபர்கள் பார்த்தால்கூட ஆச்சரியப்படுவார்கள் என்று எழுதியுள்ளீர்கள். திராவிடர் கழகம் என்றும் தமிழ் கலைகளுக்கு எதிரி இல்லை. மூட நம்பிக்கைகளைத்தான் எதிர்க்கிறது.

சங்கர்நகர், மா. எ. நவநீதன்.

• விளையாட்டுத் துறையையும் விலக்கும் அரசு என்ற கட்டுரை சிந்தனையைத் தூண்டுவதாக இருந்தது. திறமையிருந்தும், முன்னேறப் பல முட்டுக்கட்டைகளைத் தாண்ட வேண்டிய நிலையில் நெளிந்து கொண்டு இருக்கும் பல விளையாட்டு வீரர்களின் உள்ளக் குமுறல்களை, நெல்லை மாவட்டத்தில் விளையாட்டுத் துறையில் ஈடுபட்டுள்ள ஒருவரின் உணர்ச்சி வடிவில் வெளியிட்டுள்ளீர்கள். அட்டை வண்ணப்படங்கள் ஸூப்பர்!

திருச்சி—20, டி.என். லக்ஷ்மணன்.

• 'கல்கி' அவதாரம் எடுத்து இருப்பவர் கூறியவை அபத்தமாகத் தோன்றினாலும், அவரின் பரம் பொருள் ஒன்றே என்ற கொள்கை அமுதமாக இனித்தது.

குருவரெட்டியூர். நந்திவர்மன்.

• கேள்வி — பதில் எழுதுவதற்கு முன்பு தராசு ஊறுகாய் வியாபாரம் செய்திருப்பார்போல் தெரிகிறது! எப்படியோ எங்கள் வாயில் எச்சில் சுரக்கச் செய்துவிட்டார்.

இட்டச்சேரி, நம்பி.

• இந்தியா—பாக் எல்லைப் படை குவிப்பை கிரிக்கெட்டோடு வெகுநேர்த்தியாக ஒப்பிட்டுக் காட்டியிருக்கிறீர்.

திருச்சி—2, ஆற்காடு எழிலன்.

• எம்.எஸ். பெருமாள் எழுதிய 'முன்னாள் முதல்வர்' சிறுகதை வெகு அருமை. ஒவ்வொரு ஊரிலும் இதுபோல ஒரு முதல்வர் இருந்துவிட்டால், தமிழ்நாடு நிச்சயம் முன்னேறிவிடும்.

புதுக்கோட்டை. கோ. சுரேஷ்.

• ஜனனியின் 'உருவங்களும் உள்ளங்களும்...' ரத்தினச் சுருக்கமாக இருந்தாலும் உயிரோட்டமுள்ள சிறுகதை.

சாமல்பட்டி. வி.சி. ஜெயமணி.

• கல்கி 8.2.87 இதழில் வெளியான ஃபிலிம் இன்ஸ்டிடியூட் மாணவர்கள் பற்றிய துணுக்கைக் கண்டு திடுக்கிட்டோம். எங்களில் சிலர் தமிழ்ப் படங்களுக்குச் சென்றது உண்மையே. மறுக்கவில்லை. ஆனால் சென்றது, பொழுதுபோக்க அல்ல. அயல் தேச விருந்தினர் பலர் எங்களுடன் நெருங்கிப் பழகினார்கள். அவர்களுக்கு நமது கலாசாரங்களை விளக்கிக் கூறவே அவர்களுடன் தமிழ்ப் படங்களுக்குச் சென்றோம்.

அது மட்டுமல்ல, ஒரு மொழியின் முழுக் கருத்தையும் சப்-டைட்டில்கள் மூலம் வெளிப்படுத்த முடியாது. இதனை ஆராயத்தான் 'மௌன ராகம்' படத்திற்குச் சென்றோம். உதாரணமாக அப்படத்தில் 'தும்மித் தொலைக்காதே' என்ற வசனத்திற்கு Don't sneeze என்ற வாசகம் வந்ததைக் காட்டினார்கள். மொழிபெயர்ப்பு சரிதான் என்றாலும் இதில் அந்தக் காட்சியின் முழு அர்த்த பாவமும் வெளியாகவில்லை என்பது தெளிவு.

இதுபோன்று சப்-டைட்டில்களுடன் தமிழ் படம் தமிழகத்தில் எங்கு திரையிடப்படுகிறது என்பதைத் தாங்கள் கூறினால் அப்படங்களை இங்கேயே பார்த்துக் கொள்கிறோம். 'ராம் தேரி கங்கா மைலி' போன்ற படங்களின் பக்கம் தலை வைத்துக் கூட நாங்கள் படுக்கவில்லை என்பதே முழுக்க முழுக்க உண்மை.

ம.வெ. இராமச்சந்திரா,
இரண்டாமாண்டு இயக்குதல்,
சென்னை. அரசு திரைப்படக் கல்லூரி.





# ஸ்கூட்டர் அனுபவம்



## ஹார்ஸ் பவர்!

ஆபீஸுக்கு லேட்டாகி விட்டதால் குறுக்குச் சாலையில் வண்டியைச் செலுத்தினேன். அங்கே ஆணும் பெண்ணுமாக இரு குதிரைகள் காதல் வயப்பட்டுச் சாலையை அடைத்துக் கொண்டு நின்றன. எனக்கு வந்த கோபத்தில் ஸூப்பர் ஸவுண்ட் ஹாரனைச் சற்று பலமாக அழுத்த, காதல் கலைக்கப்பட்டதால் குதிரைக்கு எனக்கும் மேல் கோபம் பொத்துக் கொண்டு வர, என் வண்டியை ஓங்கி ஒரு உதைவிட்டது! அந்த வேகத்தில் மோட்டார் சைக்கிளின் சில பகுதிகள் கழன்று பல அடி தூரம் தெறித்து விழுந்தன என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! குதிரை சக்தி (HP) என்றால் என்ன என்று புரிந்து கொண்டேன்!

பெங்களூர், ஆட்டோ சர்ஜன் கண்ணன்.

## கலாட்டா கருணையானது!

சாலையில் விளையாடிக் கொண்டிருந்த சிறுவன் குறுக்கே வந்துவிட, மாமா ஓட்டி வந்த மோட்டார் பைக் இடித்துவிட்டது. சட்டென்று பிரேக் போட்டதால் சொற்பக் காயம்தான். ஆனாலும் கூட்டம் கூடிவிட்டது. நூறு, ஐந்நூறு என்று தலைக்குத் தலை பணம் கொடுக்குமாறு கலாட்டா செய்ய ஆரம்பித்தனர். பில்லியனில் வந்திருந்த நான், சட்டென்று தரையில் உட்கார்ந்து, வயிற்றைப் பிடித்துக் கொண்டு, "ஐயோ, வயிறு வலிக்குதே! தலை சுற்றுதே!" என்று புலம்ப ஆரம்பித்தேன். "சாமி! பெண்ணைச் சீக்கிரம் டாக்டர்கிட்டே அழைச்சிட்டுப் போங்க" என்று கூட்டம் அனுதாபத்துடன் டிராக் மாறிப் பேச ஆரம்பித்தது. இதுதான் சமயம் என்று நழுவினோம்! என் சமயோசிதப் புத்தியை இன்றுவரை மாமா பாராட்டி வருகிறார்!

கோவை, சீதா.

## மனைவியை மறந்து....!

எனக்குக் குழந்தை பிறந்திருந்ததால் சில மாதங்கள் எங்கேயும் வெளியே செல்லவில்லை. பிறகு முதன் முறையாக என் கணவரின் டி.வி.எஸ்.—50 ல் பின்னால் நான் ஏறிக் கொள்ள, சினிமாவுக்குக் கிளம்பினோம். வழியில் ஒரு நண்பரைப் பார்த்து விட்டு வாகனத்தை நிறுத்திப் பேச ஆரம்பித்தார். நான் நிழலுக்குச் சற்று ஒதுங்கி நின்றேன். திடீரென்று வண்டி கிளம்பும் சத்தம். திரும்பிப் பார்த்தால் நண்பர் பின்னால் ஏறிக் கொள்ள, என் கண் முன்னால் இவர் மொப்பெட்டை ஓட்டிக் கொண்டு போய் விட்டார்! நல்லவேளை, கையில் கொஞ்சம் சில்லறை இருந்தது. பஸ் பிடித்து வீடு திரும்பினேன். சில காலமாகவே என்னை எங்கும் அழைத்துப் போகாமல் மொப்பெட்டில் தாம் மட்டும் சென்று வந்த பழக்கத்தில் இன்று நான் உடன் வந்ததையே மறந்து விட்டிருக்கிறார் என் கணவர்! அவர் வீடு திரும்பியதும் என்ன நடந்தது என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

— ராஜபாளையம், ஆர். லக்ஷ்மி.

## இடித்தல்... சிரித்தல்... சேர்தல்!

ஆட்டுக்குட்டிக்காக ஸ்கூட்டரை ஒதுக்குகிறேன் என்று ஓரமாய் நடந்து சென்ற பெண் மீது மோதி விட்டார் நண்பர் சிவராம்! கூட்டம் கூடி விடச் செமையாக வாங்கிக் கட்டிக் கொண்டார். அந்தப் பெண்ணுக்கே பரிதாபமாகப் போய்விட்டது. "எனக்கு ஒன்னும் நேரலே, அவரைப் போக விடுங்க" என்றாள். சிவராம் மன்னிப்புக் கோரி நன்றியும் கூறி விடை பெற்றார். அன்று முதல் அந்தச் சாலையில் அடிக்கடி போக ஆரம்பித்து, அவளைப் பார்த்தபோதெல்லாம் ஸ்கூட்டரை நிறுத்திக் காலை ஊன்ற ஆரம்பித்து, சிரிப்பு மலர ஆரம்பித்து, காதல் மணம் பரவ ஆரம்பித்து... பிறகென்ன கல்யாணத்தில் முடிய வேண்டியது தானே!

மன்னை, சதிரா.

## பகல் கொள்ளை!

கடைக்கடையில் சிகரெட் அடித்துக் கொண்டிருந்த நான் என் ஸ்கூட்டரை யாரோ அடித்துக் கொண்டு போவதைப் பார்த்துத் திகைத்து விட்டேன். சிகரெட்டை வைத்துவிட்டு ஓடுவதற்குள் வெகு தூரம் போய்விட்டான்! இந்தப் பகல் கொள்ளையைப் பக்கத்தில் உள்ள போலீஸ் ஸ்டேஷனில் ரிப்போர்ட் செய்து விட்டுத் திரும்பினால், ஸ்கூட்டர் மறுபடி பழைய இடத்திலேயே நிறுத்தப்பட்டிருந்தது! "மன்னிச்சுக்குங்க ஸார்! முதலாளிக்குத் திடீ

ரென்று வலிப்பு வந்திருக்க; டாக்டரை அவசரமா அழைச்க வர எனக்கு வேறே வழி தோணலே!'' என்று குழைந்தான், அதன் பக்கத்தில் நின்றவன்!

பெங்களூர். என். ஆர். ஆர். லிங்கம்.

## கொம்பேறி மூக்கன்!

''பாம்பு! பாம்பு'' என்று வாசலில் சத்தம் கேட்க, ஓடிப் போய்ப் பார்த்தால், ஒரு பாம்பு இந்தக் கலாட்டாவுக்கு அஞ்சி ஸ்கூட்டரின் முன் புற மட்கார்டிலிருந்து தொங்கும் ரப்பர் ஃபிளாப் பில் தலை உயர்த்தி ஏறி, ஸ்கூட்டரின் உட்புறமே சென்றுவிட்டது! முருகனை வேண்டிக் கொண்டு வேஷ்டியை மடித்துக் கட்டிக் கொண்டு ஸ்கூட்டரை மெக்கானிக்கிடம் ஓட்டிச் சென்றேன். அவர் நம்பவேயில்லை! வற்புறுத்தலின் பேரில் ஸ்பீடா மீட்டரின் மேல் பகுதியைக் கழற்றி, கேபிளை ஆட்டி வெளியே இழுக்கப் பாம்பு சீறிக் கொண்டு வெளி யேறியது! ஒன்றரை அடி கொம்பேறி மூக்கன்!

ஈரோடு, டி. ஆர். ரமணி

## பந்தா ஹோண்டா!

பக்கத்து ஊரில் நடந்த உறவினர் திருமணத் துக்குப் பழைய ஸ்கூட்டரில் போனால் 'பந்தா' வாயிராது என்று நண்பனின் புதிய ஹோண் டாவை வாங்கி வந்தேன். பாதி தூரம் போனவுடன் பின் டயர் பங்க்சர்! மோட்டார் சைக்கிளில் ஸ்டெப்னி வசதி இல்லாததால் மனைவி நடக்க, பைக்கைத் தள்ளிக் கொண்டு போய்ச் சேர்ந்தேன். முகூர்த்தம் முடிந்து விட்டது! ''ஸ்கூட்டரில் வந்தி ருந்தால் ஸ்டெப்னி மாற்றி நேரத்துக்கு வந்திருக்க லாம்'' என்றேன். ''எல்லாம் உங்கள் 'பந்தா' விருல் வந்த வினை'' என்றாள் மனைவி.

நெய்வேலி, ப. உத்தண்டராமன்.

## கருணையும் திறமையும்

ரோட்டின் குறுக்கே மிரண்டு துள்ளிய இரு மாடுகள் எங்கள் மீது பாயப் போவதாக பிலிய னில் இருந்த நான் எண்ண, நல்லவேளையாக அவை திசை திரும்ப, நண்பனும் அவன் ஸ்கூட்ட ரும் நானும் தப்பினோம். ''கடவுள் காப்பாற்றி னார்'' என்றேன். நண்பன் சற்றுக் கர்வமாக, ''கடவுள் கிருபையோடு மனிதனின் திறமையும் சேர வேண்டும்'' என்றான். சற்று நேரத்தில் ஒரு பள்ளம் எதிர்ப்பட, அதை நண்பன் கவனியாத தால் அதில் ஸ்கூட்டர் இறங்கிச் சாய, தூக்கி எறியப்பட்டோம். நல்லவேளையாக காயமில்லை. புழுதியைத் தட்டிக் கொண்டு எழுந்தோம். அவன் என்னைப் பரிதாபமாகப் பார்க்க, நான் சொன் னேன்: ''நீ கூறியது உண்மை! கடவுள் துணை மட்டும் போதாது; மனிதனின் திறமையும் சேர வேண்டும்.''

திருச்சி, ஸ்ரீனிவாசன்.

## '''புக்' பண்ணு!''

ஹெல்மெட் அணியாதவர்களைப் பிடிக்க வேண் டிய போலீஸ்காரர் என்னையும் தவறுதலாக நிறுத்தி விட்டார். நான் ஹெல்மெட் அணிந்துதான் வந்ததாக ஸார்ஜெண்டிடம் சொன்னேன். ''இல்லே ஸார்!'' என்று மறுத்த போலீஸ்காரர் பின்புறம் பார்க்க உதவும் நிலைக்கண்ணாடியில்தான் நான் ஹெல் மெட்டை மாட்டியிருந்ததாகச் சாதித்தார். உடனே நான் ஸார்ஜெண்டிடம், ''என் வண்டியில் ரேர் வியூ மிரரே இல்லையே? இதிலிருந்தே இவர் பொய் சொல்வது தெரியவில்லையா?'' என்று நெஞ்சை நிமிர்த்திக் கேட்டேன். ஸார்ஜெண்ட் சிரித்துக் கொண்டே, ''இவரை ஹெல்மெட் இல்லாததற்கு புக் பண்ண வேண்டாம்; ரேர் வியூ மிரர் இல்லாத தற்கு புக் பண்ணு'' என்று உத்தரவு போட்டார்!

திருச்சி, நா. பாஸ்கர்.

## இரண்டு பாடங்கள்!

அடுத்த ஊரிலுள்ள அக்கா வீட்டுக்குக் கணவரும் நானும் புறப்பட்டோம். இரு குழந்தைகள் வேறு. ஸ்கூட்டரில் ஏற்றிக் கொண்டோம். வழியில் சாலை யில் சோளக் கதிர்களைக் காயப் போட்டிருந்தார் கள். முன் அனுபவமில்லாததால் கணவர் அவற் றின் மீது வேகமாக ஓட்டிப் போக, ஸ்கூட்டர் சறுக்கிச் சாய்ந்தது. எல்லோரும் தூக்கி எறியப் பட்டோம். நல்லவேளை, பலத்த காயம் இல்லை. சிராய்ப்புகளுடன் போயிற்று. 'சாலையில் கதிர்கள் பரப்பப்பட்டிருந்தால் சர்வ ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்; ஸ்கூட்டரில் இருவருக்கு மேல் பயணம் செய்வது எப்போதும் ஆபத்து' என்ற இரு பாடங்களையும் இச்சம்பவம் புகட்டியது.

தேனி, அனுசூயா.

## கோயிலைச் சுற்றி... சுற்றிச் சுற்றி.....!

புது ஸ்கூட்டர் வாங்கினேன். எப்படி ஓட்ட வேண்டும் என்று கற்றுக் கொடுத்தார்கள். 'பூ இவ்வளவுதானே!' என்று நினைத்துக் கொண்டு, பூஜை போட்டு, உடன் வந்த அம்மாவையும் பில்லியனில் ஏற்றிக் கொண்டு, புறப்பட்டேன். ''நேரே கோயிலுக்கு விடு'' என்றாள் அம்மா. ''மாட வீதிகளில் பிரதட்சிணமாக வா; அப்புறம் கோயிலுக்குள் போகலாம்'' என்றாள். ''சரி'' என் றேன். ஆனால் வலம் வந்த எனக்கு ஸ்கூட்டரை நிறுத்தத் தெரியவில்லை! சுற்றிச் சுற்றி வர, அம்மா, ''நிறுத்து! நிறுத்து!'' என்று கத்த, கோயில் வாசலில் குருக்கள், ''பரவாயில்லே, 108 முறை சுற்றினால் நல்லதுதான்'' என்று கிண்டல் செய்ய, கடைசியில் பெட்ரோல் தீர்ந்து போய் ஒரு வழியாக ஸ்கூட்டர் தானாகவே நின்றது!

சென்னை, ராஜதுரைமுருகன்.

- அனைவரும் பெறும் சன்மானம் தவிர குலுக்கல் முறையில் ரூ 100 பரிசு பெறு கிறவர்:

  எல். கண்ணன்,
  51, பனசங்கரி, மூன்றாவது நிலை,
  பெங்களூர்—28.





# பொன்னம்பலப் பெருவிழா

ஒரு வாரத்துக்கு வேத மந்திரங்கள், தேவாரத் திருவாசகப் பாடல்கள் ஒலித்தன. கிராமியக் கலை நிகழ்ச்சிகள் நடந்தன. சீர்காழி, லால்குடி, மாண்டலின் சீனிவாசன் போன்றோரது இசை நிகழ்ச்சிகள் வேறு! மொத்தத்தில் கலைநயத்துடன் கூடிய ஆன்மீகப் பெருவிழாவாக நடந்தது சிதம்பரம் கோயில் கும்பாபிஷேகம். முப்பத்திரண்டு வருஷங்களுக்கு முன் நடந்த கும்பாபிஷேகத்துக்குப் பிறகு இப்போது நடப்பதையும் காணும் இரட்டை பாக்கியம் செய்தவர்கள் சொல்வது: "முன்னது அமைதியான விஷயம்; இன்றைய நிகழ்ச்சி ஆர்ப்பாட்டம் மிக்க ஆரவார விழா!"

அம்பலவாணன் சிவகாமசுந்தரியுடன் எழுந்தருளியிருக்கும் தில்லைக் கோயிலின் சித்சபைக்கும் கனகசபைக்கும் நான்கு இராஜ கோபுரங்களுக்கும் பிப்ரவரி 11 அன்று மஹா மஹா கும்பாபிஷேகம். காணத் திரண்ட மக்களின் எண்ணிக்கை குத்துமதிப்பாக ஐந்து லட்சம்! இந்த வைபவத்துக்கென்றே பிரத்யேகமான யாகசாலை நிறுவப்பட்டு பரமேஸ்வர தீட்சிதர் தலைமையில் பத்து கால பூஜைகள், வேத பாராயணங்கள் முதலியன நடைபெற்றன.

சித்சபையின் மேலுள்ள, ஒன்பது சக்திகளை விளக்கும் பொற்கலசங்கள் கதிரவனுக்குச் சவால் விட்டு மின்ன, புதிதாக வர்ணம் பூசப்பட்ட கோபுரங்கள் பொலிவுடன் கம்பீரமாகத் திகழ, சரியாக 9.39லிருந்து 10.09க்குள் ராஜரத்தின தீட்சிதர் தலைமையேற்று கும்பாபிஷேகத்தை நடத்தி வைத்தார்.

செய்தித்தாள்கள், ரேடியோ, டீ.வி. மூலம் நிறைய விளம்பரம் பெற்ற நிகழ்ச்சிக்குத் தாராளமாக பஸ்கள் விடப்பட்டன. இலவச தங்குமிடம், இலவச சாப்பாடு, குடிநீர் வசதி முதலியவற்றை நகராட்சியுடன் சேர்ந்து பொது மக்களும் நன்றாகவே நிறைவேற்றி வைத்தனர். போதிய சுகாதார வசதிகள் இல்லாதது, காலரா தடுப்பு ஊசி பற்றிய பயமுறுத்தல் இவற்றையும் மீறி, எந்த அசம்பாவிதமும் இன்றி விழா நடந்தேறியது அம்பலவாணன் திருவருளே. "வீதிக்கு வீதி டீ.வி. வைப்பதாகக் கூறி ஏமாற்றிவிட்டார்களே" என்ற புலம்பல் மட்டும் அடிக்கடி கேட்டுக் கொண்டே இருந்தது!

அழகிய தூண்கள், மேலே எழும்பிய சிறிய கோபுரம் என்று புதுப்பொலிவுடன் காட்சி அளிக்கும் ரயில்வே ஸ்டேஷன்; அவசர அவசரமாக அகலப்படுத்தி, செப்பனிடப்பட்ட வீதிகள் — இவை கும்பாபிஷேக லாட்டரியில் சிதம்பரத்துக்கு அடித்த ஆறுதல் பரிசுகள். நாற்பது நாள் மண்டலாபிஷேகத்தில் தமது நட்சத்திர தினத்தன்று தமிழக முதல்வர் உபயமளித்திருப்பது, ஆரம் தேதி விழாவைத் துவக்கி வைத்த வி.வி. சுவாமிநாதன் கும்பாபிஷேகத்தன்று வராமல் இருந்தது ஆகியவை அரசியல் வாய்களுக்குக் கிடைத்த அவல்.

மக்களின் ஒருமித்த பாராட்டைப் பெற்றது காவல் துறை. "பக்த கோடிகளுடன் பக்காக் கேடிகளும் கலந்துள்ளனர். ஜாக்கிரதை!"; "இறைவனிடம் உள்ளத்தைப் பறிகொடுக்கும்போது கள்வனிடம் நகைகளைப் பறி கொடுக்காதீர்கள்!" போன்ற நூதன அறிவிப்புக்கள் காவல் துறை உபயம்.

ஸ்பெஷல் பாஸ் லிஸ்டம், வி.ஐ.பி.க்கள் மட்டும் அம்பலத்தைச் சுற்றி உருவாயிருந்த தாற்காலிக அமைப்புக்களிலிருந்து கும்பாபிஷேகத்தை நன்றாகப் பார்க்க வசதி செய்தது. மற்றவர்கள் கோபுர கும்பாபிஷேகத்தைப் பார்த்ததுடன் திருப்தி அடைந்தனர்.

பலவித கும்பாபிஷேகச் சிறப்புக்களில் தலையாய சிறப்பு, முன்பு பிராகாரத்தின் ஓரம் அமர்ந்து ஓதுவார்கள் ஓதிக் கொண்டிருந்த தேவார, திருவாசகப் பாடல்கள், எதிர்ப்புக்களை வென்று இப்போது சன்னிதியிலேயே ஒலிப்பதுதான்.

— ஜயஸ்ரீ ராஜ்

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.

நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை—600 032. போன்: 431543 434157.
ஆசிரியர் குழு அலுவலகம்: 26, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை—600 034. போன்: 473389.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ 78/—; வெளி நாடு கப்பல் தபால் ரூ 250/—; விமானத் தபால் ரூ 650/—.
(ஆறு மாதச் சந்தா ஏற்கப்படும்.)

REGISTERED No. M. 4762
Registered as a Newspaper in Sri Lanka

# அபார பலம். 'காம்பிடான்' பலம்.



## அந்த அற்புத உறுதியை உங்கள் வீட்டுக்கு அளிக்கிறது ராம்கோ சிமெண்ட்.

காம்பிடான் மில் மூலம் அற்புத உறுதி ஊட்டப்பட்ட சிமெண்ட் : ராம்கோ.

மிக உறுதியான சிமெண்டை உற்பத்தி செய்ய அதி நவீனமான, மிகச் சிறப்பான கிரைண்டிங் இயந்திரமாகிய ''காம்பிடான் மில்லை''த் தென்னகத்திலேயே முதன் முதலாக அமைத்தது—மதராஸ் சிமெண்ட்ஸ் தான்.

அத்தோடு, அல்லும் பகலும் கச்சாப் பொருள் களையும், தயாரான சிமெண்டையும் இடை விடாது கடும் பரிசோதனை செய்ய 'எக்ஸ்ரே அனலைசர்' எனும் அதி நவீன உபகரணம்.

ஆகவே, என்றென்றும், அற்புத உறுதி கொண்ட காம்பிடான் சிமெண்ட் உங்களுக்குக் கிடைக்கிறது.

மற்றெவரிடமும் இல்லாத தனிச் சிறப்பான தொழில்நுட்ப மேம்பாட்டால் ராம்கோ சிமெண்ட் அபார பலமும், சிறப்பான இறுகும் சக்தியும் கொண்டதாகத் திகழ்கிறது.

ஆம்! சிக்கனமான செலவில், சிறப்பான பலம்மிக்க கட்டிடங்களை அமைக்க ராம்கோ சிமெண்டையே உபயோகியுங்கள்.

நாணயமான எடை, நம்பிக்கையான தரத்திற்கு நிகரில்லாத பெயர்.




## ராம்கோ சிமெண்ட்

- அபார பலமும், அற்புத உறுதியும் கொண்ட 'காம்பிடான்' சிமெண்ட்.




CLARION-M-MCL-17A-R-86-TAM

தயாரிப்பாளர்கள் :
மதராஸ் சிமெண்ட்ஸ் லிமிடெட்
ராமசாமிராஜா நகர் 626 204
(காமராஜர் மாவட்டம்)

சணல், பாலித்தீன், மற்றும் காகிதப் பைகளிலும் கிடைக்கிறது.